உ

ஸ்ரீமதே நாராயணாய நம:

# புருஷ ஸூக்தம்

## முகவுரை

புருஷ, என்பதற்கு புரு=சர்வப்பிராணிகளுடைய ஹிருதய குகையில், ஷ= சயனஞ் செய்கின்றவர், அல்தது புர்=எல்லாவற்றிற்கும் முதலில் உஷ=இருப்பவர் என்றயோகத்தால் சர்வாந்தர்யாமி என்றும், சர்வஜகத் காரண பூதரென்றும் அர்த்தமேற்படுவதால் அவ்விதமஹிமை தங்கிய ஸ்ரீமந்நாராயணனைப் பிரதிபாதிக்கின்ற सहस्रशीर्षा என்று தொடங்கி साध्यास्सन्ति देवा: என்றதுவரை படிக்கப்படும் வைதிகமந்திரங்களுக்கு புருஷ ஸூக்தம் எனப்பெயரிடப்பட் டிருக்கிறது.

உத்தரநாராயணனுவாகத்தில் ஹ்ரீதேவி, லக்ஷ்மீ தேவிஇவர்கள் ஸ்ரீநாராயணனுடைய பத்நிகளென்றும், அவர்களுடன் கூடினவராய் பகவானை உபாஸித்தால் சகலக்ஷேமத்தையுமடையலாமென்றும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

பிறகு மகாநாராயணனுவாகத்தில் உபாஸ்யனான பகவானின் கல்யாண குணங்களும், அவரை உபா

சிக்கவேண்டியவிதமும், மற்றும் அது விஷயமான ரஹஸ்யங்களு முபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் புருஷ சூக்தவிஷயமாக சநத்குமாரசம்ஹிதை முதலிய நூற்களிற் சில விசேஷங்கள் உபதேசிக்கட்பட்டிருக்கின்றன. அவைகளை இங்கு எழுதுகிறோம்.

पूर्वं सनत्कुमारेण पृष्टो विष्णुस्सनातनः।
उक्तवान् पौरुषं होमविधानं कामदं नृणाम् ॥

वसिष्ठायोदितं तेनचात्रये सोऽब्रवीदिदम्।
वोधायनाय तेनोक्तं स स्वशिष्येभ्य उक्तवान् ॥

वक्ष्यामि तदहं पुण्यं शृणुध्वं मुनिसत्तमाः।
पुत्रप्रदमपुत्राणां जयदं जयकामिनाम् ॥

श्रीदं श्रीकमिनां पुंसां राज्यदं राज्यकामिनाम् ।
धान्यदं धान्यकामानां कीर्तिदं कीर्तिकामिनाम् ॥

भुक्तिदं भुक्तिकामानां मुक्तिदं मुक्तिकामिनाम् ।
बहुना किमिहोक्तेन सर्वसिद्धिप्रदं नृणाम् ॥

ஸநத் குமாரரால் கேட்க்கப்பட்ட நாராயணன் புத்திரன், ஜயம், சம்பத்து, ராஜ்யம், தான்னியம், கீர்த்தி, புக்தி, முக்தி, முதலிய சர்வ பலனையும் தரக்கூடிய ஸ்ரீ புருஷ சூக்த ஹோமத்தின் முறையையுபதேசித்தார் என்று தொடங்கி ஹோமஞ் செய்யும் முறையுமுபதேசிக்கப்பட்டிருக்கிறது.

## புத்திரார்த்தியாற் செய்யவேண்டிய புருஷ ஸூக்தஹோமவிதி

சுக்கிலபக்ஷ பிரதமையன்று தொடங்கி கிருஷ்ண பக்ஷப்பிரதமை வரை 16 நாட்களில் ஒவ்வொரு நாளும் புருஷ ஸூக்தத்திலுள்ள 16ருக்குகளைச் சொல்லி பாயஸத்தால் 1000ஹோமஞ் செய்யவேண்டும். அல்லது 12 நாள், அல்லது 6 நாட்களாவது ஹோமஞ் செய்யவேண்டும். இந்த ஹோமஞ் செய்யத்தொடங்குமுன் சந்தான கோபாலமந்திரோபதேசத்தைப்பெறவேண்டும்.

### श्रीसन्तानगोपालमन्त्रः ॥

अस्य श्रीसन्तानगोपालकृष्णमहामन्त्रस्य, आनन्द नारदादिऋषयः। अनुष्टुप्छन्दः। सन्तानगोपालकृष्णो देवता। अं, आं, बीजम्। इम्, ईं शक्तिः। उम्, ऊं कीलकम्। सन्तानगोपालकृष्णप्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः। अम्, आम् इत्यादिना हृदयादिन्यासः। ध्यानम्—

पाणौ पायसभक्तमाहितरसंबिभ्रन्मुदा दक्षिणे
सव्ये शारदपूर्णचन्द्रधवलं हय्यंगवीनं दधत्।
कण्ठे कल्पितपुण्डरीकनखमप्युद्दामकांञ्चि वहन्
देवो दिव्यदिगंबरो दिशतुनः पुत्रं यशोदाशिशुः ॥

मूलमन्त्रः—

देवकीसुत गोविन्द वासुदेव जगत्पते।
देहिमे तनयं कृष्ण त्वामहं शरणं गतः ॥

देवदेव जगन्नाथ गोत्रवृद्धिकर प्रभो।

देहि मे तनयं शीघ्रमायुष्मन्तं यशस्विनम्॥

*பிறகு அனுக்ஞை செய்து கொண்டு* **शुभे शोभने तिथौ नक्षत्रे राशौ जातस्य मम धर्मपत्न्याश्च आवयोः इह जन्मनि जन्मान्तरसहस्रेवा ज्ञानाज्ञानकृतसन्तानप्रतिबन्धकीभूतानां, गुरुद्वेषण, बालघातन, बालताडन, बालतर्जन, गोवत्सावियोजन, परहृत्क्लेशकरण, प्राण्यंडभेदन, अष्टकाद्यकरण, अन्यसुतविद्वेषण, मृगशावहनन, गर्भध्वंसनरूपैकादशदुरितानां निवृत्तिद्वारा आयुष्मत्सुरूपसुगुणानेकसुपुत्रावाप्त्यर्थं श्रीभूमीसमेतश्रीमहाविष्णुप्रसादसिद्ध्यर्थं एभिर्ब्राह्मणैस्सह सनत्कुमारोक्तप्रकारेण आचार्यमुखेन ऋत्विङ्मुखेन च पुरुषसूक्तजपहोमकर्म करिष्ये ।** *என்று சங்கல்பஞ் செய்துகொண்டு ஆசார்ய வரணம் ருத்விக் வரணம் இவைகளை யஜமானன் செய்தபிறகு ஆசாரியன், தனது சரீரத்தில் புருஷஸூக்தமந்திரத்தால்* **संहारसृष्टिस्थितिन्यास** *ங்களைச்செய்து கொள்ள வேண்டும்.*

अस्य श्रीपुरुषसूक्तन्यासमहामन्त्रस्य, अन्तर्यामी भगवान्नारायण ऋषिः, आद्यस्य पञ्चदशर्चस्य अनुष्टुप्छन्दः, अन्त्यायास्त्रिष्टुप्छन्दः, श्रीभूमीसमेतश्रीमहाविष्णुर्देवता। पुरुष एवेति बीजम्। नान्यः पन्था इति शक्तिः, एतवानस्येति कीलकम्। श्रीभूमीसमेतश्रीमहाविष्णुप्रसादसिद्ध्यर्थे पुरुषसूक्तन्यासमहामन्त्रजपे विनियोगः। अतोदेवा अवन्तुनो यतो विष्णुर्विचक्रमे। पृथिव्यास्सप्तधामभिः॥ ओं भूः पुरुषायाङ्गुष्ठाभ्यां नमः। इदं विष्णुर्विचक्रमे त्रेधा निदधे पदम्। समूळ्हमस्य

पांऽसुरे॥ ओं भुवः, महापुरुषाय तर्जनीभ्यां नमः। त्रीणि पदा विचक्रमे विष्णुर्गोपा अदाभ्यः। अतो धर्माणि धारयन् ॥ ओं सुवः, ब्रह्मपुरुषाय मध्यमाभ्यां नमः। विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे। इन्द्रस्य युज्यस्सखा। ओं महः, विष्णु पुरुषाय अनामिकाभ्यां नमः। तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः। दिवीव चक्षुराततम् ॥ ओं जनः, रुद्रपुरुषाय कनिष्ठिकाभ्यां नमः। तद्विप्रासो विपन्यवो जागृवा ँ सस्समिन्धते। विष्णोर्यत्परमं पदम् ॥ ओं तपस्सत्यं, सर्वपुरुषाय करतलकरपृष्ठाभ्यां नमः। एवं हृदयादिन्यासः। ध्यानम्—

गोक्षीराभं पुण्डरीकायताक्षं चक्राब्जाभ्यां
शंखकौमोदकीभ्याम्।
श्रीभूमिभ्यामर्चितं योगपीठेध्याये
द्देवं पूजयेत्पौरुषेण।

पञ्चोपचारान् कृत्वा—संहतिन्यासं कुर्यात्।

अथ संहतिन्यासः।

(1) सहस्र....दशाङ्गुलम् ॥ वामकरे। पुरुष....अतिरोहति। दक्षिणकरे। एतावा....अमृतं दिवि ॥ वामचरणे। त्रिपादूर्ध्व....अभि ॥ दक्षिणचरणे ॥ तस्मा....पुरः ॥ वाम जानुनि। यत्पुरुषेण....हविः ॥ दक्षिणजानुनि। तं यज्ञं....ऋष-

---

(1) அந்தந்த ருக்குகளைப் படித்து குறிப்பிட்டபட்டிருக்கும் அந்தந்த அங்கங்களைத் தொட்டுக் கொள்ளவேண்டும்.

यश्च ये । वामोरौ । तस्माद्यज्ञा....श्चये ॥ दक्षिणोरौ ॥ तस्माद्यज्ञात्सर्वहुतः । ऋचस्सा....जायत । नाभौ ॥ तस्मादश्वा....अजावयः । हृदये । यत्पुरुषं....उच्येते । कण्ठे । ब्राह्मणो....अजायत । वामांसे । चन्द्रमा....अजायत ॥ दक्षिणांसे । नाभ्या....अकल्पयन् । वदने । सप्ता....पशुम् । अक्ष्णोः । यज्ञेन....सन्तिदेवाः । शिरसि । ओं नमो नारायणाय ।

अथ सृष्टिन्यासः

सहस्र शीर्षा....अत्यतिष्ठद्दशाङ्गुलम् ॥ शिरसि ॥ पुरुषएवेदं....यदन्नेनातिरोहति । अक्ष्णोः । एतावानस्य....त्रिपादस्यामृतं दिवि ॥ वदने । त्रिपादूर्ध्व....साशनानशने अभि ॥ दक्षिणांसे । तस्माद्विरा....अथोपुरः । वामांसे । यत्पुरुषेण हविषा....शरद्धविः ॥ कण्ठे ॥ तं यज्ञं बर्हिषि....साध्याऋषयश्च ये ॥ हृदये ॥ तस्माद्यज्ञात्सर्वहुतः । संभृ....चये ॥ नाभौ ॥ तस्माद्य....यजुस्तस्मादजायत ॥ दक्षिणोरौ । तस्मादश्वा अजायन्त....अजावयः ॥ वमोरौ ॥ यत्पुरुषं....पादावुच्येते ॥ दक्षिणजानुनि ॥ ब्राह्मणोऽस्य....शूद्रो अजायत ॥ वामजानुनि । चन्द्रमा....द्वायुरजायत ॥ दक्षिणचरणे ॥ नाभ्या आसी....लोक ँ अकल्पयन् ॥ वामचरणे ॥ सप्तास्या....पुरुषं पशुम् ॥ दक्षिणकरे । यज्ञेन....देवाः । वामकरे ॥ ओंनमो नारायणाय ॥

## अथ स्थितिन्यासः

सहस्रशीर्षा....दशाङ्गुलम् । नाभौ । पुरुष एवेदं.... अतिरोहति । दक्षिणोरौ । एतावानस्य....अमृतं दिवि ॥ वामोरौ । त्रिपादूर्ध्व....साशनानशने अभि ॥ दक्षिणजानुनि । तस्माद्विराडजायत....अथोपुरः ॥ वामजानुनि ॥ यत्पुरुषेण.... शरद्धविः ॥ दक्षिण चरणे ॥ तं यज्ञं....ऋषयश्चये ॥ वाम चरणे। तस्माद्यज्ञा....ग्राम्याश्चये ॥ दक्षिणकरे ॥ तस्माद्यज्ञा.... यजुस्तस्माद् जायत ॥ वामकरे ॥ तस्मादश्वा....अजावयः । शिरसि । यत्पुरुषं....पादावुच्येते ॥ अक्ष्णोः । ब्राह्मणोऽस्य.... शूद्रो अजायत । वदने ॥ चन्द्रमामनस....वायुरजायत ॥ दक्षिणांसे । नाभ्या....अकल्पयन् । वामांसे ॥ सप्तास्या.... पुरुषं पशुम् । कण्ठे । यज्ञेन....सन्ति देवाः ॥ हृदये ॥ ओं नमो नारायणाय।

பிறகு பிரும்மவரணம் முதல் முகாந்தம் வரை செய்துகொண்டு ஹோமகுண்டத்திற்கு முன்பாகத்தில் வைக்கப்பட்ட கலசத்தில் ஸ்ரீ பூமீசமேத நாராயணப்பிரதிமையைவைத்து அதில் முதல்ருக்கைப் படித்து **श्रीभूमीसमेतं महाविष्णुमावाहयामि** என்று ஆவாஹனத்தையும், பிறகு பிராணப் பிரதிஷ்டையையும் 2வதால் ஆசனத்தையும், 3வதால் பாத்யத்தையும் 4வதால் அர்க்கியத்தையும், 5வதால் ஆசமநீயத்தையும், 6வதால் ஸ்நானத்தையும், 7வதால் வஸ்திரத்தையும், 8வதால் உபவீதத்தையும், 9வதால் கந்தத்

தையும், 10வதால் புஷ்பத்தையும், 11வதால் தூபத்தையும், 12வதால் தீபத்தையும், 13வதால் நைவேத்தியத்தையும், 14வதால் மந்திரபுஷ்பத்தையும், 15வதால் பிரதக்ஷிணத்தையும் சமர்ப்பணஞ் செய்யவேண்டும். பிறகு யஜமானன் பத்தினி இருவருக்கும் முன் சொன்னபடி संहतिउत्पत्ति स्थिति கிரியாசங்களைச்செய்து வைத்து, நீண்ட வாழையிலையில் வெண்ணெயினால் த்ரிகோணயந்திரம் எழுதி அதன்மேல் சிறிய வெள்ளிப்பாத்திரத்தில் சாலிக்கிராமத்தை வைத்து பத்தினியுடன் கூடயஜமானனைக்கொண்டு ஸ்ரீ பூமீஸமேத மஹாவிஷ்ணுவின் பூஜையை முன்சொன்னபடி செய்விக்கவேண்டும். பிறகு ஆசாரியன் அக்நியில் மகாவிஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து புருஷ சூக்த மந்திரத்தால் 16 உபசாரங்களைச் செய்து புருஷ சூக்தத்திலுள்ள 16ருக்குகளைக் கொண்டு முறையே ஆஜ்யஹோமஞ் செய்யவேண்டும். திரும்பவும் अवदान தர்மப்படி சருவை எடுத்துக்கொண்டு 16ருக்குகளால் 16 தடவை அன்ன ஹோமஞ்செய்யவேண்டும். பிறகு அவ்வளவு ஆஜ்ய ஹோமமுஞ் செய்யவேண்டும். பிறகு அக்நிக்குத் தென்பக்கத்தில் தர்ப்பத்தைக் கிழக்கு நுனியாக இரண்டாகப் பிரித்து வைதுக்கொண்டு அரசஞ்சமித்து ஒன்றை எடுத்து புருஷ சூக்தத்தின் முதல் ருக்கைப்படித்து ஹோமஞ்செய்து முன் இரண்டாகப் பிரித்து விரிக்கப்பட்ட தர்ப்பங்களுள் தென்பாகத்திலுள்ள தர்ப்பத்தில் புருஷ சூக்த முதல் மந்திரத்தால் ஒரு அரச இலையை வைக்கவேண்டும். இவ்விதமே இரண்டாவது ருக்கைப்படித்து

ஒரு சமித்தை ஹோமஞ் செய்து அதனாலேயே மற்றுமோர் அரச இலையை முன் வைத்த இடத்தில் வைக்கவேண்டும். இவ்விதம் 8 ருக்குகளால் 8சமித்துகளை ஹோமஞ் செய்து8 அரச இலைகளைத் தென்பக்கத்திலுள்ள தர்ப்பத்தில் வைத்து பிறகு 9வது, ருக்கு முதல் 8ருக்குகளாலும் முன்போலவே சமித்தால் ஹோமஞ் செய்து ஒவ்வொரு ருக்கினாலும் முன் போலவே ஒவ்வொரு அரச இலையை முன்வைத்த தர்ப்பத்திற்கு வடக்கிலுள்ள தர்ப்பத்தில் வைக்கவேண்டும். பிறகு 16ருக்குகளையும் படித்து ருக்குஒன்றுக்கு ஒருதடவை வீதம் 16 தடவை ஆஜ்யஹோமஞ் செய்து ஹோமஞ் செய்யப்பட்ட ஆஜ்யத்தின் சேஷத்தால் முன்வைக்கப்பட்ட 16 அரச இலைகளையும் முறையே (1)உபஸ்தரணஞ் செய்யவேண்டும். பிறகு பாயஸத்தைக் கையிலெடுத்துக்கொண்டு புருஷ சூக்தத்தின் முதல் ருக்கைப்படித்து பாதிபாகத்தை ஹோமஞ்செய்து சேஷத்தை முதலில் வைக்கப்பட்ட அரச இலையில் மறுபடியும் முதல்ருக்கைப் படித்து வைக்கவேண்டும். இரண்டாவது ருக்கைப்படித்து முன் போல் ஹோமஞ் செய்து மறுபடியும் இரண்டாவது ருக்கைப்படித்து சேஷத்தை இரண்டாவதாகவைக்கப்பட்ட அரசஇலையில் வைக்கவேண்டும். இவ்விதமே மீதமுள்ள 14ருக்குகளாலும் ஹோமஞ் செய்து பாயசத்தை அரசஇலையில் வைக்கவேண்டும். பாயஸத்தை ஹோமஞ் செய்த பிரகாரமே ஆஜ்யத்தாலும் ஹோமஞ் செய்து ருக்குகளைப்படித்துக் கொண்டே முன் வைத்த பாயஸங்

(1) உபஸ்தரணம் = நெய்யைத்தடவுவது.

களில் முறையே அபிகாரணஞ் செய்ய வேண்டும். பிறகு வேறு 16 அரச இலைகளை எடுத்து முறையே ருக்குகளைப் படித்து முன்வைக்கப்பட்ட கிரமத்தை அனுசரித்து மூடவேண்டும். பிறகு ஆசாரியன் ருத்விக்குகளுடன் புருஷ ஸூக்தத்தை 63 தடவை திருப்பி ஒவ்வொரு ருக்குக்கும் ஒவ்வொரு ஆவிருத்தி வீதம் 1008 தடவை ஹோமஞ் செய்ய வேண்டும். பிறகு ஸ்விஷ்ட கிருத்தைச் செயதுமுறைப்படி ஹோமத்தைப் பூர்த்திசெய்து விடவேண்டும்.

பிறகு கும்பம் யநதிரம் இவைகளில் ஆவாஹனஞ் செய்யப்பட்ட தேவதைகளுக்கு மறுபடியும பூஜைசெய்து यज्ञेनयज्ञम् என்ற ருக்கினுல் உத்வாஸனஞ் செய்யவேண்டும் ஆனல் யந்திரத்தில் ஆவாஹனஞ் செய்யப்பட்ட தேவதையைமட்டும் உத்வாஸனஞ் செய்யக்கூடாது. பிறகு பிரதிமாதானம, கோதானம் முதலிய தானங்களைச செய்து ருத்விக்குகளுக்கும் ஆசாரியனுக்கும் தனது சக்திக்குத் தகுந்தவாறு (1) வித்தசாட்டியம் செய்யாமல் யஜமானன் தக்ஷிணையைக் கொடுக்கவேணடும.

பிறகு புருஷ ஸூக்ததகின் முதல் ருககைப்படித்து முதலில அரச இலையில் வைக்கப்பட்ட பாயசத்தை பத்தினியைக் சாப்பிடும்படி செய்து அதே ருக்கைப்படித்து கும்பத்தின் தீர்த்தத்தையும் சாப்பிடும்படி செய்யவேண்டும். இவ்விதமே முறையே அந்தந்தருக்கு களைப்படித்து அந்தந்தபாய

---

(1) வித்த சாட்டியம். லோபம்.

சத்தைப்பிராசனஞ் செய்வித்து அந்தந்தருக்கைப் படித்து தீர்த்தத்தையும் பிராசனஞ் செய்வித்து யந்திரம் போடப்பட்ட வெண்ணெயையும் பிராசனஞ்செய்விக்கவேண்டும். பிறகு பிராம்மணர்களிடமிருந்து ஆசீர் வாதத்தைப் பெற்றுக்கொண்டு பிராம்மண போஜனத்தை நன்றாய் நடத்தி வைக்கவேண்டும். இவ் விதஞ் செய்தால் நிச்சயமாய் புத்திரனுண்டாவான் என்று சொலலப்பட்டிருக்கிறது.

பகவத் பிரசாதத்தில் மாத்திரம் விருப்பமுள்ளவனாயிருந்தால் அஷ்டாக்ஷரமந்திரத்தை ஆசாரியனிடமிருந்து சம்பிரதாயப்படி பெறவேண்டும். பிறகு சாலக்கிராமம் முதலிய பகவத்சான்னித்யம் பெற்ற அர்சாமூர்த்திகளில் இந்த புருஷ சூக்தத்திலுள்ள 16 ருக்குகளால் 16 உபசாரங்களைச் செய்து ஒவ்வொரு தினமும் பூஜை செய்துவரவேண்டும். அஃதுடன் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பகவத்கீதை முதலிய கிரந்தங்களைப் பராயணஞ் செய்வது மிகவும் அவசியம். இவ்விதஞ் செய்வதால் இம்மையில் சகல க்ஷேமங்களையுமடைந்து மறுமையில் பகவல் லோகத்தையுமடைவான் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆகவே பகவத்பிரசாத ஹேதுவானதும், ஆஸ்திகர்யாவராலும் பொன்னேபோல் போற்றத்தக்கதுமான இந்த புருஷ சூக்தத்தை **यदेव विद्यया करोति श्रद्धया...तदेव वीर्यवत्तरं भवति** [எதை அர்த்தானுசந்தானத்துடனும், சிரத்தையுடனுஞ் செய்து வருகிறாரோ அதுவே வீரிய வத்தரமாக(அதிக பலனைத்தரகூடியதாக)ஆகின்றது] என்ற

வசனப்படி அர்த்தானு சந்தானத்துடனும் பாராயணஞ்செய்து வந்தால் சகல க்ஷேமங்களையுமடையலாமென்பது நிச்சயம் அதற்காக சாஸ்திரங்களையும, சம்பிரதாயங்களையுமனுசரித்து ஷெ புருஷ சூக்தத்தை எளிய தமிழ் நடையில் மொழி பெயர்த்திருக்கிறோம.

இக்கொடுமையான கலிகாலத்தில் பலகாரணங்களால் தந்தமது சாகைப்படி வேதத்தை அத்யயனஞ் செய்யக்கூடாவிடினும் இந்த புருஷ சூக்தத்தை மட்டுமாவது அர்த்தானு சந்தானத்துடன் பாராயணஞ் செய்து வருவதின் மூலம் பகவத் பிரசாதத்தை யடைந்து இம்மை மறுமைகளில் சகல க்ஷேமதனதையுமடையும்படி பிரார்த்திக்கிறோம்.


இங்ஙனம்

கடலங்குடி பருமம ஸ்ரீ நடேசசாஸ்திரிகள்
வியாகரண வேதாந்த பாரங்கதர்
சோதிட மந்திரசாஸ்திர வித்துவான்.
பாகவத பகவத் கீதோ பன்யாசகர் 495 தங்கசாலைத்
தெரு. P.T. சென்னை




श्रीः

श्रीमते वासुदेवाय नमः

ओं १. सहस्रशीर्षापुरुषः । सहस्राक्षस्सहस्रपात् ।
सभूमिं विश्वतो वृत्वा । अत्यतिष्ठद्दशाङ्गुलम् ॥

| | |
|---|---|
| सहस्रशीर्षा | ஆயிரக்கணக்கான சிரஸ்ஸை யுடையவரும் |
| सहस्राक्षः | ஆயிரக்கணக்கான கண்களை யுடையவரும |
| सहस्रपात् | ஆயிரக்கணக்கான பாதங்களை யுடயவரும் |
| सः | லோகவேத பிரசித்தருமான |
| पुरुषः | நாராயணன் |
| भूमिम् | (பிர்ம்மாண்ட கோள ரூபமான) பூமியை |
| विश्वतः | நாலாபக்கத்திலும் |
| वृत्वा | சூழ்ந்துகொண்டு |
| दशाङ्गुलम् | பத்து அங்குல மளவுள்ள தேசத்தையும் |
| अति | அதையும் தாண்டியும் (பிர்மாண்டத்திற்கு வெளியான எல்லா இடத்தையும், |
| अतिष्ठत् | நிறைந்து நின்றார். |

தாத்பாயம.—சர்வபிராணி [1]சமஷ்டி ரூபரா யும், அவ்யக்தம் மஹத்தத்வம் முதலிய அசேதன வர்க்கத்திற்கு விலக்ஷணராயும் புருஷபத வாச்சியரு மான நாராயணன் ஆயிரக்கணக்கான (அளவுகடந்த) சிரஸ், கண், பாதம் இவைகளை யுடையவராயும் அது மட்டுமன்றி பிர்ம்மாண்டத்திற்கு மேலும் எங்கும் பாலில நெய்போல் வியாபித்திருக்கின்றார் என்றும், அளவுகடந்த பிராணிகளின் சிரம், கண், பாதம் முத லியவைகளே இவரதுசிரம், கண், பாதங்களாக ஆகின் றன வென்றும, அவரே சர்வ வியாபியென்றும் சர் வாந்தர்யாமி யென்றும் இந்த மந்திரத்தால் உபதே சிக்கப் பட்டது.

## இரண்டாவது ருக்

(அவதாரிகை) எவ்விதம் நிகழ்காலத்தி லுள்ள சர்வ பிரபஞ்சத்திற்கும் புருஷபத வாச்சியனை நாரா யணன் சரீரியும் அந்தர் யாமியுமோ அவ்விதமே சென்ற காலத்திலும் வருங்காலத்திலும் உள்ள சர்வ பிரபஞ்சத்திற்கும் வேறொருவர் சரீரியாயும் அந்தர் யாமியாயும் இருக்கலாமோ வென்று சாமானியமாகத் தோன்றும சங்கையானது விலக்கப் படுகிறது.

---

1 மரங்களடர்ந்த விடத்தைப் பொதுவாய்ச் சொல்லு மிடத்து வனம் என்றும் தனியாய்ச்சொல்லுமிடத்து மரம் என்றும் சொல்வது வழக்கம். வனம் என்றது சமஷ்டிப் பெயர். மரம் என்றது வியஷ்டிப் பெயர்.

पुरुष एवेद ँ सर्वम्। यद्भूतं यच्च भव्यम्॥
उतामृतत्वस्येशानः। यदन्नेनातिरोहति॥

| | |
|---|---|
| इदम् | நிகழ்காலத்தி லுள்ளதும் |
| यत् | யாதொரு |
| भूतम् | சென்ற காலத்திலுள்ளதுமான |
| यत् | யாதொரு |
| भव्यञ्च | வருங்காலத்தி லுள்ளதுமான |
| जगत् | ஜகத்துண்டோ |
| (तत्) | (அது) |
| सर्वम् | யாவும் |
| पुरुष एव | புருஷபத வாச்சியனான நாராயணனே. |

தாத்பர்யம்—நிகழ்காலத்திற் போலவே சென்ற காலத்திலும் வருங்காலத்திலுமுள்ள சூக்ஷ்ம ஸ்தூல மான சகல பிரபஞ்சத்திற்கும் ஸ்ரீமன் நாராயணனே சரீரி யென்றும், அவரே சகல பிரபஞ்ச அந்தர்யாமி யென்றும், முக்காலத்திலுமுள்ள சூக்ஷ்ம ஸ்தூலமான சகல பிரபஞ்சமும அவரது சரீர மென்றும் "**यस्य सर्वं शरीरम्**" (எவருக்கு சர்வமும்சரீரமோ) "**यस्सर्वमन्तरो यमयति**" (எவர் சர்வத்திற்கு மந்தர்யாமியா யிருந்து நியமனம்செய்கின்றாரோ) என்ற அந்தர்யாமி பிராம்மணத்தின் ரகஸ்யப்படி உபதேசிக்கப்பட்டது.

ஆனால், சர்வந்தர்யாமியாயும், சர்வ சரீரியாயும், புருஷபத வாச்சியனான நாராயணன் இருந்தபோதி லும் முமுக்ஷுக்களான ஜீவர்களுக்கு "அமிருதத்வம்'

என்றும் "நாகம்" என்றும் "பரமபதம" என்றும சொல்லப்படும் மோக்ஷவீடடைவதற்கு, அவ்வித மோக்ஷ வீட்டிற்குப் பதியான மற்றொருவனை ஆசிர யிக்க வேண்டுமோ என்ற சங்கை பிறகு ஏற்படும. அதையும உतामृतत्वस्येशानः என்றதால் விலக்கி உப தேசிக்கப் படுகிறது.

उतामृतत्वस्ये शानः

| | |
|---|---|
| उत | மேலும் |
| अमृतत्वस्य | மோக்ஷ நிலைக்கும் |
| ईशानः | சுவாமி யாகிறார் |

தாதபரியம்—சர்வஜகத் சரீரியாயும், சர்வஜகத் அந்தர்யாமியாயுமிருப்பவரே மோக்ஷத் திற்கும் சுவாமி என்று கூறினதால் இவரது தியானத்தாலே நாகம், பரம் பதம, அமிருதத்வம், என வழங்கும் மோக்ஷ நிலையை அடையலாம் என்று உபதேசிக்கப் பட்டது.

அவதாரிகை—புருஷ பதத்தின் பொருளான நாராயணன் சர்வாந்தர்யாமியாயும், மோக்ஷத்திற் குப் பதியாயும் இருப்பினும் சிருஷ்டி கர்த்தாவானவர் மற்றொருவரா யிருக்கலாம் என்ற சங்கை யுதிக்கவே அதற்கு வேண்டி இந்த மந்திரத்தின் பாகம் ஆரம்பிக் கிறது.

यदन्नेनातिरोहति

| | |
|---|---|
| यत् | யாதுகாரணம் பற்றி |
| अन्नेन | பிராணிகளின் கர்மத்தை நிமித்தமாகக்கொண்டு |
| अतिरोहति | தனது காரணா வஸ்தையை விட்டு ஜகத்தின் நிலையை (காரியாவஸ்தையை) யடைகிறரோ. |

தா-ம். நாராயணனே கரணவஸ்தையை விட்டு காரியாவஸ்தையை யடைகிறர் என்றதால் சிருஷ்டி கர்த்தாவும் அவர் தான் என்றும் உபதேசிக்கப் பட்டது. அதோடு பிரபஞ்ச சிருஷ்டி காலத்தில் பிராணிகளை சுகிகளாகவோ, அல்லது துக்கிக ளாகவோ ஒரே விதமாகப் படைக்காமல் பற்பல விதமாய் சிருஷ்டித்ததிலிருந்து வைஷம்மியமும், உண்மையில் கஷ்டப்படும் பிராணிகளிடத்து தயையில்லாததால் நைர்கிருணியமும் ஏற்படலாம் அந்த தோஷத்தையும் **अन्नेना तिरोहति** (கர்ம சாபேக்ஷமாய் சிருஷ்டிக்கிறர்) என்றதால் விலக்கி உபதேசிக்கப் பட்டது ஆகவே **सहस्र शीर्षा** என்ற முதல்மந்திரத்தால் பிரபஞ்ச ஸ்திதி என்ற ரக்ஷணம் அவரது காரிய மென்றும், **अन्नेनातिरोहति** என்றதால் பிரபஞ்சசிருஷ்டி என்ற காரியமும் அவருடையது தானென்றும், **अमृतत्वस्ये शानः** என்றதால் தன்னை பஜிப்பவர்க்கு பிறப்பிறப்பிற்குக் காரமான பாப கர்மங்களைப்போக்கி மோக்ஷத்தைக் கொடுப்பார் என்றதால் அநுக்கிரகம் என்ற பகவத் அசாதாரண குணவிசேஷமும் உபதேசிக்கப்பட்டது.

## மூன்றாவது ருக்

அ-கை. இரண்டாவது மந்திரத்தால் காரணு வஸ்தையினின்றும் காரியா வஸ்தையை யடைகிறார் என்றதால் காரணமான மிருத் பிண்டமானது காரியாவஸ்தாபன்ன கடரூபத்தை யடைந்த பிறகு காரணமான வஸ்துவே தனிமையிலில்லாமல போவது போல காரியமான பிரபஞ்சத்தைவிட காரணமான பரமாத்ம சுவரூபமும் தனிமை யில்லாததோ என்ற சங்கையுண்டாவதுடன் ஸ்தூல பிரபஞ்சாவஸ்தையை யடைகிறார் என்றதால் சுகதுக்க பிராப்தியும் அவருக்கு உண்டாகலாமோ வென்றும் சங்கை யுண்டாகலாம். அவ்வித சங்கையானது இந்த மந்திரத்தால் விலக்கப் படுகிறது.

एतावानस्य महिमा। अतोज्यायांश्च पूरुषः।
पादोऽस्य विश्वा भूतानि। त्रिपादस्यामृतं दिवि॥

| | |
|---|---|
| एतावान् | (மூன்று காலத்திலுமுள்ள ஜகத்தானது எவ்வளவு உண்டோ) இவை யாவும் |
| अस्य | இவரு (நாராயணனு)டைய |
| महिमा | தனது சாமர்த்திய விசேஷமே |
| पूरुषश्च | நாராயணனேவெனின் |
| अतः | இந்த (காரிய ஜகத்தைக்காட்டிலும்) |
| ज्यायान् | உண்மையில் மேலானவர் (அதாவது காரிய பிரபஞ்ச சம்பந்தமற்றவர்.) |

தா-ம். காரணாவஸ்தையை யடைந்த ஸூக்ஷ்ம சித் அசித் பிரபஞ்ச சரீரியான பரமபுருஷன் ஸ்தூல சித் அசித் பிரபஞ்சாவஸ்தையை யடைந்த போதி லும் உண்மையில் அவரது சுவரூப சுவபாவத்தைப் பார்க்குங்கால் संभोगप्राप्तिरितिचेन्न वैशेष्यात् (பிரபஞ்சத் திற்குள்ள சுகதுக்கானுபவம் வருமோ வென்றால் அது வராது. ஏனெனில் பிரபஞ்சத்துடனிருந்தா லும் அதோடு ஒட்டாத விசேஷத்தன்மை அவரிட மிருத்தலால்) என்ற நியாயப்படி பிரபஞ்சத்துடனி ருந்தாலும் ஜீவர்களுக்கு அவித்தை கர்மம் இவைகள் காரணமாய் பிரபஞ்ச சம்பந்தமிருப்பதுபோல பரம புருஷனுக்கு அதன் சம்பந்த மில்லாததால அதன் மூலமாக எவ்வித சுகாதியநுபவமும் அவருக்குக் கிடையாவென்று மந்திரத்தின் முற்பாதியால் உப தேசிக்கப்பட்டது.

அ-கை. அவ்விதமாயினும் பிரபஞ்சத்தை விட தனிமையான ஓரிடமோ அல்லது சுவரூபமோ அவரு க்குக் கிடையாவோ வென்ற சங்கையானது பிற்பா தியால் விலக்கப்படுகிறது.

| | |
|---|---|
| विश्वा | எல்லா (முக்காலத்திலுமுள்ள) |
| भूतानि | (உற்பத்தியை யடைகிற) பிராணி சமூ கங்களும் |
| अस्य | இந்த பரமபுருஷனுடைய |
| पादः | நாலிலொரு பங்கானதே (அதாவது அம்சமே) |

अस्य இவருடைய
त्रिपात् (பிருகுதியான) மூன்று பங்கான ரூப மானது
अमृतं (सत्) விநாசமற்றதா யிருந்துகொண்டு
दिवि சுவப்பிரகாச (சுத்த சத்வ வடிவ) மான வைகுண்டத்தில்
(वर्तते) (நிலைத்து நிற்கிறது)

தா-ம். சித் அசித் ரூபமான சகல பிரபஞ்சமும் அவரது அம்சமென்றும் அவர் அம்சி என்றும், காரியாவஸ்தையை யடைந்த மிருத் பிண்ட திருஷ்டாந்தம் இங்கு பொருந்தாதென்றும், கேவல மிருத்தைக் காரணமாகச் சொல்லுகிறோமே யொழிய மிருத் பிண்டத்தைக் காரணமாகச் சொல்லுவதில்லை என்றும், சாந்தோக்யத்தில் **यथा एकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात्** என்று கூறி இருப்பதுவும், பிண்டாவஸ்தையை யடைந்த மிருத்தையே காரணமென்று சொல்லாமே யொழிய தனியான மிருத்தைக் காரணமாகச் சொல்லுதல் கூடாதென்றும, கேவல மிருத்தானது காரணமாக ஆகவேண்டுமானல் ஜலம் முதலியவைகளுடன் சேர்ந்த பிறகே யாகின்றதென்றும், ஜலாதிகளின் சேர்க்கை இல்லாமலும் தனி மிருத்து இருக்கக்கூடுமாப்போல பரமபுருஷனும் கர்ம வாஸனைகளுடன் பிரளயத்தில் பிரகிருதியில் லயமடைந்த் ஜீவராசிகளுடன் கூடின சூக்ஷ்ம சித் அசித் அந்தர்யாமியாகும் நிலையில் காரணத்தன்மையை யடைந்த போதிலும் ஜீவர்களுடைய கர்மவாசனைகளுக்குரிய

சுகதுக்கானுபவ ரூபமான போகாதிகளைத் தரவேண்டியே ஸூக்ஷ்மசித் அசித் விசிஷ்டனாயிருந்து, அதை ஸ்தூலமாக்கி (சிருஷ்டித்து) பிண்டம் குடம் முதலிய எந்த நிலையிலும் கேவல மிருத்தானது காரியத்தை விட்டகலாதிருத்தல் போல பரமபுருஷனும் அந்தர்யாமியாயிருக்கிறாரென்றும் உபதேசித்தபடியே இந்த மந்திரத்திலும் உபதேசித்து கேவலமிருத்தின் திருஷ்டாந்த வாயிலாக பிராகிருத பிரபஞ்சத்தைவிட மேலான அப்பிராகிருதமான பரமபதத்தில் அவரது ஸ்வரூபமானது அப்பிராகிருத சுத்த சத்வாத்மகமான திவ்யமங்கள விக்கிரஹத்துடன் வசிக்கின்றதென்றும் அவரது உபாசனையே அவ்வித பரமபதத்தைத் தருமென்றும் இதனால் உபதேசிக்கப்பட்டது.

## நான்காவது ருக்

அ-கை. மூன்றாவது மந்திரத்தால் உபதேசிக்கப்பட்ட பகவத்ஸ்வரூபத்தை அநுவாதம் செய்து அவரிடமிருந்துண்டான ஜகத்தின் சிருஷ்டிக்கிரமமானது முறையே உபதேசிக்கப் படுகிறது.

त्रिपादूर्ध्व उदैत्पुरुषः । पादोऽस्येहाभवात्पुनः ।
ततो विष्वङ्व्य क्रामत् । साशनानशने अभि ॥

(यः) (யாதொரு)

त्रिपात् பரிச்சின்ன பிரபஞ்சத்தைவிட வியாபகரூபமுள்ள

पुरुषः புருஷ (நாராயண) ன்

| | |
|---|---|
| **ऊर्ध्वे** | (பிரகிருதி காரியமான பிரபஞ்சத்திற்கு) மேலே |
| **उदैत्** | விலகி நின்றாரோ (பிராகிருத குண தோஷ மற்றிருந்தாரோ) |
| **अस्य** | இவருடைய |
| **पादः** | அபசமானது |
| **इह** | பிரகிருதியில் |
| **पुनः** | (சிஷ்ருடி சம்ஹாரத்திற்கு வேண்டி) அடிக்கடி |
| **अभवात्** | வருகின்றது |
| **ततः** | பிரகிருதியில் வந்தபிறகு |

साशनानशने अभि

| | |
|---|---|
| **साशन-** | போஜனாதி வியவஹாரத்துடன் கூடின சேதனமாயும |
| **अनशन-** | போஜனாதி வியவஹாரமற்ற அசேதனமாயுமுள்ள சுவரூபங்களை |
| **अभि** | அடைந்து |
| **विष्वङ्** | தேவதிரியக் முதலிய பலவடிவமாய் |
| **व्यक्रामत्** | மிகவும் வியாபித்து நிற்கின்றது |

த-ம். பரமபத நாயகனான நாராயணன, காரண பாவாபன்ன பிரகிருதி அந்தர்யாமியாயிருந்து சேதனாசேதனாத்மகமான சகல பிரபஞ்சத்தையும் சிருஷ்டித்து சிருஷ்டிக்கப பட்ட அந்த பிரபஞ்சத்திலும் அந்தர்யாமியாகவே எங்கும் வியாபித்து பிரகாசிக்கி

ருர் என்று இந்த நான்காவது மந்திரத்தில் உபதே சிக்கப்பட்டது.

ஐந்தாவது ருக்

அ-கை. பிரம்மாண்ட தேஹியான ஹிரண்ய கர்ப்ப சிருஷ்டிவரை யுள்ள அத்வாரகமான பகவத் சிருஷ்டியை உபதேசித்து தன்னுல் சிருஷ்டிக்கப் பட்ட ஹிரண்யகர்ப்பர் மூலமாக சிருஷ்டிக்கப் படும் சத்வாரகமான சகல பிரபஞ்ச சிருஷ்டியை உபதே சிக்கத் தொடங்கி இந்த மந்திரத்தால ஹிரண்யகர்ப்ப சிருஷ்டியும் அவர் மூலமாகச் செய்யப்படும் சிருஷ்டி யில் சிலவற்றும் உபதேசிக்கப் படுகிறது.

तस्माद्विराडजायत । विराजो अधिपूरुषः ।
सजातो अत्यरिच्यत । पश्चाद्भूमिमथो पुरः ॥

| | |
|---|---|
| **तस्मात्** | அந்த (நாராயணனிடமிருந்து) |
| **विराट्** | (பிர்ம்மாண்டத்தை தேகமாகவுடைய) ஹிரண்ய கர்ப்பர் |
| **अजायत** | உண்டாஞர் |
| **पूरुषः** | (விராட்தேகத்தை சிருஷ்டித்த) ஆதி புருஷன் |
| **विराजः** | பிர்ம்மாண்ட தேகிக்கு |
| **अधि** | மேலானவரே |

இதற்குமேல் ஹிரண்யகர்ப்பர் மூலமாய் ஏற் படும் ஜகத்தின் சிருஷ்டிக்கிரமம் உபதேசிக்கப் படு கின்றது.

जातः உண்டான
स अந்தவிராட் புருஷன்
अत्यरिच्यत (தேவதிரியக் மனுஷ்யாதி ரூபமாக) அதிகம் பரவிநின்றார்.
पश्चात् தேவாதி சிருஷ்டிக்குப் பிறகு
भूमिम् பூமியை
(ससर्ज) (சிருஷ்டித்தார்)
अथो பூமிசிருஷ்டிக்குப் பிறகு
पुरः அந்த ஜீவர்களுக்கு சப்த தாதுமய மான சரீரங்களை
(ससर्ज) சிருஷ்டித்தார

த-ம் சர்வ வேதாந்தங்களாலும வேத்யனான பரம புருஷன் தனது வசத்திலுள்ள மாயையால் விராட்தேகமான பிர்ம்மாண்டத்தையும,பிர்மமாண்ட சரீரியான ஹிரண்ய காப்பரையும் சிருஷ்டித்து பிர்ம் மாண்டாபிமானி தேவதாந்தர்யாமி யாகவும் ஆனார். இந்த பிரகாரமே सएष भूतानीन्द्रियाणि विराजं देवताः कोशांश्च सृष्ट्वा प्रविश्यामूढो मूढ इव व्यवहरन्नास्ते माययैव [சர்வோபநிஷத் பிரசித்தனான இந்த பரம புருஷன் பூதங்களையும, இந்திரியங்களையும, விராட்டையும், தேவதைகளையும,கோசங்களையும சிருஷ்டித்து தானே அதில பிரவேசித்து (உண்மையில) மூடனில்லாதவ னயினும மூடன் போலும சேதனு சேதனரூபமான பிரபஞ்ச நியமனம என்ற வியவஹாரத்தைச் செய்து கொண்டு விளங்குகிறான்] என்று உத்தர தாபனீயோ பநிஷத்திலும் உபதேசிக்கப பட்டிருக்கிறது. ஆகவே

பரம புருஷன் ஹிரண்யகர்ப்பாதி அந்தர்யாமியாகவு மிருந்து ஹிரண்யகர்ப்ப துவாரா பூமிமுதலியவற்றை யும் ஜீவபோக்கியமான சரீராதிகளையும் சிருஷ்டித் தார் என்று இந்த மந்திரத்தால் உபதேசிக்கப் பட் டது.

## ஆறுவது ருக்

அ-கை. ஐந்தாவது மந்திரத்தில் சொன்னபடி தேவசரீரங்கள் உண்டானதும் அந்த தேவர்கள் பிற குள்ள சிருஷ்டி சித்திக்க வேண்டி அவ்வித சிருஷ் டிக்குச் சாதனமான பகவத்தியான ரூபமான யக் ஞத்தைச் செய்தனர் என்று இந்த மந்திரத்தால் உப தேசிக்கப் படுகிறது.

यत्पुरुषेण हविषा। देवा यज्ञमतन्वत।
वसन्तो अस्यासीदाज्यम्। ग्रीष्मइध्मश्शरद्धविः।

| | |
|---|---|
| **पुरुषेण** | புருஷரூபமான |
| **हविषा** | ஹவிஸ்ஸினல் |
| **यत्** | யாதொரு |
| **यज्ञम्** | (மானஸ) யக்ஞத்தை (தியானத்தை) |
| **अतन्वत** | செய்தனரோ |
| **अस्य** | இந்தியான ரூபமான யக்ஞத்திற்கு |
| **वसन्तः** | வசந்த ருதுவானது |
| **अज्यम्** | நெய்யாக |
| **आसीत्** | ஆயிற்று |
| **ग्रीष्मः** | கிரீஷ்மருதுவானது |

इध्मः — சமித்தாகவும
शरत् — சரத்ருதுவானது
हविः — ஹவிஸ்ஸாகவும
(आसीत्) — (ஆயிற்று)

த-ம். ஹோம சாதனமான நெய் சமித்துஹவிஸ் முதலிய பாஹ்ய வஸ்துக்கள் இது வரை உண்டாகாத படியால் புருஷனையே ஹவிஸ்ஸாகவும, வசந்தருதுவை ஆஜ்யமாகவும், கிரீஷ்ம ருதுவை சமித்தாகவும், சரத் ருதுவை சாமான்யஹவிஸ்ஸாகவும் மனதால் பாவித்து மானஸயாகத்தை (த்யானத்தைச்) செய்தனர் என்று பொருள் கொள்ளல் வேண்டும். இவ்விதமே ஏழாவது எட்டாவது மந்திரங்களிலும் பொருள் கொள்ளல்வேண்டும்.

ஏழாவது ருக்

सप्तास्यासन् परिधयः । त्रिस्सप्त समिधः कृताः ।
देवा यद्यज्ञं तन्वानाः । अबध्नन् पुरुषं पशुम् ॥

अस्य — இந்த சங்கல்ப (தியான) ரூபமானயக் ஞத்திற்கு
सप्त — [1]காயத்திரீ முதலிய ஏழு சந்தஸ்ஸு-கள்

1. காயத்திரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், பிருஹதீ, பங்தீ, திருஷ்டுப், ஜகதீ, என்று ஏழு சந்தஸ்ஸு-கள்.

| | |
|---|---|
| परिधयः | [1]ஏழுபரிதிகளாக |
| आसन् | ஆயின |
| त्रिस्सप्त | [2]இருபத்தொன்றும |
| समिधः | சமித்துக்களாகவும் |
| कृताः | செய்யப்பட்டன (தியானிக்கபட்டன) |
| देवाः | பிரஜாபதி பிராணேந்திரியரூபர்களான தேவர்கள் |
| यत् | யாதொரு வைராஜ புருஷனுண்டோ |
| तम् | அந்த |
| पुरुषम् | புருஷனை |
| पशुम् | பசுவாக |
| अबध्नन् | கட்டினார் (வைராஜ புருஷனையே பசுவாக தியானித்தனர்.) |

எட்டாவது ருக்கு

तं यज्ञं बर्हिषि प्रौक्षन्। पुरुषं जातमग्रतः।
तेनदेवा अयजन्त। साध्या ऋषयश्च ये।

| | |
|---|---|
| यज्ञं | (மானச) யாக சாதனமானவரும் |
| अग्रतः | எல்லா சிருஷ்டிக்கு முன்பு |
| जातम् | இருப்பவருமான |

1. ஜஷ்டிக வேதியிலுள்ள ஆஹவ நீயத்திற்கு 3-ம் உத்தர வேதியிலுள்ள ஆஹவ நீயத்திற்கு 3-ம் சூரியனை ஏழாவது சமித்தாகவும் கூறப்பட்டிருக்கிறது.

2 12 மாதங்கள் 5-ருதுக்கள் 3 லோகங்கள் சூரியன் ஆகிய இருபத்தொன்றை.

तम् அந்த பசுவாகப் பாவித்து யூபத்தில் கட்டப்பட்ட புருஷனை.
वर्हिषि மானஸயாகத்தில்
प्रौक्षन् புரோக்ஷித்தார்கள்
साध्याः சிருஷ்டிக்குச் சாதனமானவர்களும்
ऋषयश्च மந்திர திருஷ்டாக்களுமான
ये देवाः யாதொரு தேவர்களுண்டோ
(ते) (அவர்கள்)
तेन அந்தப் புருஷ பசுவினால்
अयजन्त யாகத்தை (தியானத்தைச்) செய்து முடித்தனர்

ஒன்பதாவது ருக்

तस्माद्यज्ञात्सर्वहुतः । संभृतं पृषदाज्यम् ।
पशूꣳस्ताꣳश्चक्रे वायव्यान् । आरण्यान् ग्राम्याश्चये ॥

सर्वहुतः சர்வாத்மக புருஷனை ஹோமத்திரவியமாகவுடைய
तस्मात् அந்த
यज्ञात् மானஸயாகத்தினின்றும்
पृषदाज्यम् தயிர் நெய் முதலிய போக்கிய வஸ்து சமூகமானது
संभृतम् சம்பாதிக்க (சிருஷ்டிக்க) ப்பட்டது.
वायव्यान् வாயுதேவதாகங்களும
तान् உலகப் பிரசித்தங்களும்
आरण्यान् காட்டிலுள்ளவைகளுமான

| | |
|---|---|
| पशूंश्च | பசுக்களேயும் |
| ग्राम्याः | கிராமத்திலுள்ள வைகளுமான |
| ये | எந்தப் பசுக்களுண்டோ |
| तांश्च | அவைகளேயும் |
| चक्रे | உண்டுபண்ணினர் |

த-ம். சிருஷ்டிக்குச் சாதன பூதர்களும், விராட் பிராணேந்திரிய பூதர்களுமான தேவர்கள் விராட் அந்தர்யாமியும், புருஷபத வாச்சியனுமான ஸ்ரீமன் நாராயணனைத் தியானம் செய்து அதன்மூலமாக சிருஷ்டி சாமர்த்தியத்தை யடைந்து பகவன்னியம்மிய மான விராட் சரீரத்தினின்றும் பின்னுள்ள வற்றை சிருஷ்டித்தனர் என்று உபதேசிக்கப் பட்டது. இந்த மந்திரம் முதல் கூறப்படும் சிருஷ்டிகள் பகவன்னியம்மியமான விராட் தேஹத்தினின்று உண்டாவ தாகக் கூறப்படினும் சர்வநியந்தா வானபகவானே சுவநியம்மியமான விராட்தேகத்துவாரா எல்லா வற்றையும் சிருஷ்டித்தார் என்றும், இவைகளால் [1]சத்வாரக சிருஷ்டி கூறப்பட்டிருப்பதாகவும், கொள்ளல் வேண்டும்.

பத்தாவது ருக்

तस्माद्यज्ञात्सर्वहुतः। ऋचस्सामानि जज्ञिरे।
छन्दा᳚ंसि जज्ञिरे तस्मात्। यजुस्तस्मादजायत॥

---

(1) ஹிரண்ய கர்ப்பனேக் கொண்டு செய்யப்படும் சிருஷ்டி சத்துவாரகம், தானே சிருஷ்டிப்பது அத்துவாரகம்.

| | |
|---|---|
| सर्वहुतः | சர்வாத்மக புருஷனை ஹோமத்திரவிய மாக வுடைய |
| तस्मात् | அந்த |
| यज्ञात् | யாக (மானஸத்யான) த்தினின்றும் |
| ऋचः | ருக்குகளும் |
| सामानि | ஸாமங்களும் |
| जज्ञिरे | உண்டாயின |
| तस्मात् | அந்தயாகத்தி னின்றும் |
| छन्दांसि | காயத்திரீ முதலிய சந்தஸ்ஸுகள் |
| जज्ञिरे | உண்டாயின |
| तस्मात् | அந்தயாகத்தி னின்றும் |
| यजुः | யஜுர் வேதமானது |
| अजायत | உண்டாயிற்று |

பதினொன்றாவது ருக்

तस्मादश्वा अजायन्त । ये के चोभयादतः ।
गावो ह जज्ञिरे तस्मात्। तस्माज्जाता अजावयः ॥

| | |
|---|---|
| तस्मात् | அந்த யாகத்தினின்றும் |
| अश्वाः | குதிரைகள் |
| अजायन्त | உண்டாயின |
| उभयादतः | மேற்பாகம கீழ்பாகம இரண்டிலும் பலனுள்ள வைகளான |
| ये केच | யாதொரு பிராணிகளுணடோ |
| (तेच) | (அவைகளும்), |
| गावोह | பசுக்களும் |

| | |
|---|---|
| तस्मात् | அந்தயாகத்தி னின்றும் |
| जज्ञिरे | உண்டாயின |
| तस्मात् | அந்தயாகத்தி னின்றும் |
| अजावयः | செம்மரியாடு வெள்ளாடு முதலிய வைகள் |
| जाताः | உண்டாயின |

பன்னிரண்டாவது ருக்

அ-கை. பிராம்மணர் முதலிய ஜாதி சிருஷ்டியை உபதேசிக்கவேண்டி பிர்ம்மவாதிகளின் கேள்வியும் அதற்குப்பதிலுமாக இங்கு உபதேசிக்கப் படுகின்றது. அவற்றில் முதலிற் பொதுவாகவும் பிறகு விசேஷமாகவும் கேட்கப் படுகிறது.

यत्पुरुषं व्यदधुः । कतिधा व्यकल्पयन् ।
मुखं किमस्य कौ बाहू ॥ कावूरूपादावुच्येते ॥

| | |
|---|---|
| यत् | எப்பொழுது |
| पुरुषम् | விராட் புருஷனை |
| व्यदधुः | உண்டு பண்ணினரோ |
| (तदा) | (அப்பொழுது) |
| कतिधा | எவ்வெவ்விதமாக |
| व्यकल्पयन् | மனதால் பாவித்து உண்டுபண்ணினர் |

இவ்விதம் பொதுவாகக் கேட்டுப் பிறகு விசேஷமாக (குறிப்பாக)க் கேட்கப்படுகிறது

| | |
|---|---|
| अस्य | இந்த விராட் புருஷனுடைய |
| मुखम् | முகமானது |
| किम् | எது |
| बाहू | தோட்கள் |
| कौ | எவை |
| ऊरू | துடைகளும் |
| पादौ | கால்களும |
| कौ | எவைகளாக |
| उच्येते | சொல்லப்படு கின்றன. |

பதிமூன்ருவது ருக்

இந்த மந்திரத்தில் இவருடைய முகம் முதலிய அவயவங்களாக எதெது ஆயிற்று என்ற கேள்விக்குப் பதில்சொல்லு மிடத்து பிராம்மணர் முதலியவர்கள் முகம் முதலிய அவயவங்களாக ஆயினர் என்று உப தேசம் செய்யப்பட் டிருப்பினும், யஜுர் வேதம் ஏழாவது காண்டத்தில் **समुखतस्त्रिवृतं निरमिमीत...... ब्राह्मणो मनुष्याणाम्** (அவர்முகத்தினின்றும் திருவிருத்ஸ் தோமத்தை சிருஷ்டித்தார் என்று தொடங்கி மனுஷ் யர்களுள் பிராம்மணனை முகத்தினின்றும் படைத் தார்)என்று தெளிவாய்கூறி இருப்பதாலும் சிருஷ்டிப் பிரகரண மாகையாலும் பிராம்மணர் முதலியவர்கள் முகம் முதலிய அவயவங்களி னின்றும் சிருஷ்டிக்கப் பட்டனர் என்று பொருள் கொள்ள வேண்டியது அவசியமாக ஏற்படுவதை யொட்டியே இங்கு உபதே சிக்கப் படுகிறது.

ब्राह्मणोस्य मुखमासीत्। बाहूराजन्यः कृतः।
ऊरूतदस्य यद्वैश्यः। पद्भ्यां शूद्रो अजायत॥

| | |
|---|---|
| अस्य | இந்த விராட் புருஷனுடைய |
| मुखं | முகமாக (முகத்தினின்றும்) |
| ब्राह्मणः | பிராம்மணன் |
| आसीत् | இருந்தான் (சிருஷ்டிக்கப்பட்டான்) |
| राजन्यः | க்ஷத்திரியன் |
| बाहू | தோட்களாக (தோள்களினின்றும்) |
| कृतः | செய்யப்பட்டான் |
| अस्य | இவருடைய |
| यत् | யாதொரு |
| ऊरू | துடைகளுண்டோ |
| तत् | அவைகளாக (அவைகளினின்றும்) |
| वैश्यः | வைசியன் |
| (कृतः | செய்யப்பட்டான்) |
| पद्भ्याम् | பாதங்களினின்றும் |
| शूद्रः | சூத்திரன் |
| अजायत | உண்டானான் |

த-ம். இந்த மந்திரத்தை ஆழ்ந்து நோக்காது மேற்பார்வையாக நோக்குமிடத்து பிராம்மணன் என்பவன் முகமாகவும், க்ஷத்திரியன் தோட்களாகவும், வைசியன் துடைகளாகவும் ஆயினன், பாதங்களினின்றும் சூத்திரன் உண்டானான் என்றதிலிருந்து சிலர் பிராம்மண்யம்முதலிய ஜாதியானது பிறவியிலேற்பட்டதா? அல்லது இடையிலுண்டானதா? என்

சங்கையை யுண்டாக்கி பிராம்மணாதிகள் முகம் முத லியவைகளாக ஆயினர் என்று மட்டும் உபதேசித் திருப்பதைக் கொண்டு பிராம்மண்யாதி ஜாதி இடை யில் தொழில், குணம், இவைகளாலேயே ஏற்படு கின்றன வென்றே உறுதி கூறுகின்றனர். அதன் உண்மையை நாம் இங்கு கூறுவோம். மனிதருள் பிராம்மணனைப் படைத்தார் என்று 7-வது காண் டத்தில் தெளிவாய்க் கூறி இருப்பதாலும், இங்கும் சிருஷ்டியைச் சொல்லி வருவதாலும், பிராம்மணனை சிருஷ்டித்தார் என்றால் சிருஷ்டிக்கு முன்பே பிராம் மண்யத்தையடைந்த ஜீவனை முகத்தினின்றும ஸ்தூல சரீரத்துடன் வெளியிட்டார் என்று சிருஷ்டிசப்தத் தின் (सृष्टिः स्थूलीकरणम् சிருஷ்டியானது சூக்ஷ்மம மானதை தூலமாக்குதல்) என்ற பொருளைக் கொண் டும் பிறவியிலேயே ஏற்பட்டதே யொழிய இடையில் ஏற்பட்டவையல்ல வென்பது தெளிவாகிறது.

சங்கை. அப்படியாயின் முகத்தினின்றும் பிராம் மணனைப் படைத்தார் என்று தெளிவாகக் கூறாமல் பிராம்மணன் முகமாக இருந்தான் என்று கூறியதின் கருத்து என்னை எனின் जीव ईशो विशुद्धा चित्तथा जीवे- शयोर्भिदा । प्रकृतिस्तच्चितोर्योग षडस्माकमनादयः । என்ற படி ஜீவன், பிரகிருதி, ஈசன் இவர்கள் அனாதியாகை யால் முந்தின பிரளயத்தில் சகல ஜீவராசிகளும் तं वि- द्याकर्मणी समन्वारभेते पूर्वप्रज्ञाच (தூல சரீரம் விட்டு சூக் க்ஷும சரீரமடையுங் காலத்து அந்த ஜீவனை அவனது உபாஸனம், கன்மம், முன்வாசனை இவைகளும் கூடத்

தொடர்ந்தே செல்லுகின்றன) என்றபடி அடுத்த கல்பத்தில் தந் தமக்கு வரக்கூடிய சரீரம் என்ன அதன் மூலம் வரும் சுகம் துக்கம் என்ன இவைகளுக்குச் சாதனங்களான கன்மஞான வாஸனைகளுடனேயே சூக்குமாவஸ்தையை அடைந்த பகவத் சரீரத்தில் லயமடைந்திருப்பதாலும் அவ்விதம் லயமடைந்தவர்களின் கன்மாதிகளை யொட்டியே எல்லாம்வல்ல தயாமூர்த்தியான இறைவன் போகாதிகளையும், அதன் சாதனங்களான சரீராதிகளையும் ஜீவராசிகளிடத்து இயற்கையி லமைந்த கருணையால் படைப்பதாலும், அவ்விதம் படைப்பதாலேயே அவருக்கு வைஷம்மியம், நைர்க்கிருண்யம் என்ற தோஷம் விலகுவதாலும், இந்த ருக்கில் பிராம்மணன் முகமாயிருந்தான் என்றால் அடுத்த சிருஷ்டியில் பிராம்மணாதி சரீரத்துடனிருந்து கன்மஞான பலனை அனுபவிக்கத்தக்க ஜீவராசிகள் முன்பிரளயத்தில் விராட் புருஷனது முகம் முதலியவைகளில் லயத்தை அடைந்திருந்தனர் என்று கூறியும் பிராம்மண்யம் முதலியன இடையில் வந்ததல்ல அதன் மூலகாரணமான கன்மஞானாதிகளால் கடவுளால் படைக்கும்பொழுதே ஏற்படுத்தப்பட்டவை என்றும் தெளிவுபடுத்தவே இவ்விதம் கூறினதாகக் கொள்ளல்வேண்டும். அன்றியும் பாதங்களினின்றும் சூத்திரன் உண்டானான் (அதாவது ஸ்தூல சரீரத்தை அடைந்தான்) என இந்தவாக்கிய முடிவிலேயே தெளிவாகக் கூறியிருப்பதாலும், ஏழாவது காண்டத்திலும் மனிதருள் பிராம்மணனை முகத்

தினின்று படைததரா என்றும் தெளிவாகக் கூறியி ருப்பதாலும் இடையிலுளள கன்மஞானத்தால ஜாதி ஏற்படவோ அலலது மாறவோ கூடுமெனக சொல வது பொருந்தாது. அவ்விதம் சொல்லுவோமாயின் நமக்கு மிகவும் நல்லவனுகத் தோன்றின ஒருவனுக் குப் பெண்ணை மணஞ்செய்து கொடுத்தபிறகு அவன் யாதோ இடையில் கோபங்கொண்டு அருமையான அப்பெண்ணை பல்லால் கடித்தும் காலால் உதைத்தும் தள்ளுவானேல், பல்லால் கடிப்பது காலால் உதைப் பது என்ற வெள்ளைமூக்குக் குதிரையின் குணமும் செய்கையும் மாப்பிள்ளையினிடம் காணுவதைக்கொ ண்டு அவனை அச்சாதியில் சேர்த்துக் கூறவும கூடு மோ? மேலும் கடிப்பதுவும் உதைப்பதுவுமான கழுதையின்செய்கை குணங்கள் நமது அருமைப் பசு விணிடம் கண்டால் பசுவை உபயோகப்படுத்து மிட த்து மற்றதை யுபயோகப்படுத்துவோமா? ஆகவே ஜாதி என்பது பிறவியிலேற்படுவதே யொழிய இடை யில் தொழில் குணங்களால் ஏற்படுவதல்ல வெனறும் இம்மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது. இதுவிஷ யம் விரிவாகப் பிறகு எழுதப்படும்.

அ-கை. தயிர் நெய் முதலிய ஹோமத் திரவியங் களும், பசு முதலிய ஜநதுக்களும், ருகாதி வேதங்ளும், பிராம்மணர் முதலிய மனிதர்களும் அவரிடமிருநது உண்டாவது போலவே சந்திரன் முதலியவைகளு முண்டாயினவென்று உபதேசிக்கப்படுகிறது.

चन्द्रमा मनसो जातः। चक्षोस्सूर्यो अजायत।
मुखादिन्द्रश्चाग्निश्च। प्राणाद्वायुरजायत ॥

| | |
|---|---|
| चन्द्रमाः | சந்திரன் |
| मनसः | (விராட் புருஷனது) மனதினின்றும் |
| जातः | உண்டானான் |
| चक्षोः | கண்ணினின்றும் |
| सूर्यः | சூரியன் |
| अजायत | உண்டானான் |
| मुखात् | முகத்தினின்றும் |
| इन्द्रश्च | இந்திரனும் |
| अग्निश्च | அக்கினியும் |
| (अजायेताम्) | (உண்டானார்கள்) |
| प्राणात् | பிராணனினின்றும் |
| वायुः | வாயுவானது |
| अजायत | உண்டாயிற்று |

பதினைந்தாவது ருக்

नाभ्या आसीदन्तरिक्षम्। शीर्ष्णोद्यौस्समवर्तत।
पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात्। तथालोका ँ अकल्पयन्।

| | |
|---|---|
| अन्तरिक्षम् | அந்தரிக்ஷ லோகமானது |
| नाभ्याः | உந்தியினின்றும் |
| आसीत् | உண்டாயிற்று |
| शीर्ष्णः | தலையினின்றும் |
| द्यौः | தேவலோகமானது |

| | |
|---|---|
| समवर्तत | உண்டாயிற்று |
| पद्भ्याम् | கால்களினின்றும் |
| भूमिः | பூலோகமானது |
| (अजायत) | (உண்டாயிற்று) |
| श्रोत्रात् | காதினின்றும் |
| दिशः | கிழக்கு முதலிய திக்குகள் |
| (अजायन्त) | (உண்டாயின) |
| तथा | அவ்விதமே |
| लोकांश्च | உலகங்களையும் |
| अकल्पयन् | உண்டாக்கினர் |

பதினாறுவது ருக்

அ-கை. கீழ்ச்சொல்லிய விராட் புருஷனுடைய தியானமானது இந்த மந்திரத்தால் பிரதிபாதிக்கப் படுகின்றது. அதில் மந்திர திருஷ்டாவானவர் தனது தியானுநுபவத்தை வெளிப்படுத்துகிறார்.

वेदाहमेतं पुरुषं महान्तम्। आदित्यवर्णं तमसस्तुपारे।
सर्वाणिरूपाणि विचित्यधीरः। नामानि कृत्वाभिवदन्यदास्ते॥

| | |
|---|---|
| यत् | யாதொரு புருஷன் |
| सर्वाणिरूपाणि | தேவமனுஷ்யாதி எல்லாச் சரீரங்களை |
| विचित्य | கர்மமூலமாக விசேஷமாய் அடைந்தும் |
| नामानि | இவன் தேவன், மனுஷ்யன், பசு, என்ற பெயர்களை |

| | |
|---|---|
| कृत्वा | செய்துகொண்டும் |
| अभिवदन् | அந்த நாமங்களால் பலவிதத்திலும் வியவஹரித்துக்கொண்டும் |
| आस्ते | இருந்தானோ |
| यत् | எப்பொழுது |
| अहं | (இந்த) நான் |
| धीरः | மனதைத் தன்வசமாக்கினவனாய்க் கொண்டு |
| महान्तम् | சர்வகுணங்களாலு மதிகனையும் |
| आदित्यवर्णम् | சூரியன்போல பிரகாசிக்கின்றவ னையு[மிருக்கிற |
| एतम् | இந்த |
| पुरुषम् | புருஷனை (நாராயணனை) |
| वेद | தியானத்தால் எப்பொழுதும் அனுபவிக்கிறேனோ |
| (सच) | (அந்த என்போன்ற) |
| (पुरुषः) | (அனுபவிக்கிற ஜீவன்) |
| तमसस्तु पारे | அஞ்ஞானத்தை விட்டு வெளியேறுகிறான் |

பதினேழாவது ருக்

धाता पुरस्ताद्यमुदाजहार। शक्रःप्रविद्वान् प्रदिशश्चतस्रः ॥
तमेवं विद्वानमृत इहभवति। नान्यःपंथा अयनाय विद्यते ॥

| | |
|---|---|
| धाता | பிரஜாபதியானவர் |
| पुरस्तात् | முதலில் |
| यम् | எந்த விராட் புருஷனை |

उदाजहार (தியானம் செய்கிறவர்களின் உபகாரத்திற்காக) பிரகாசப்படுத்தினரோ

शक्रः இந்திரன்

चतस्रः प्रदिशः நாலுதிக்குகளிலுமிருக்கிற எல்லாப் பிராணிகளேயும்

प्रविद्वान् மிகவும் நன்ருயறிந்துகொண்டு

(उदाजहार) பிரகாசப்படுத்தினரோ

तम् அந்த விராட் புருஷ ரூபத்தை

एवम् பிரஜாபதி இந்திரன் இவர்களின் உபதேசத்திற் கிணங்க

विद्वान् சாக்ஷாத்கரிக்கின்றவன்

इह இந்த ஜந்மாவிலேயே

अमृतः மரணதர்ம மில்லாதவனுக

भवति ஆகிருன்

अयनाय அமிருதத்வத்தை யடைவதற்கு

अन्यः வேறு

पन्थाः வழியானது

नविद्यते கிடையாது

தா-ம். விராட் அந்தர்யாமியான ஸ்வரூபததைக் குருபதேசத்தை யொட்டி இதே ஜந்மத்தில் சாக்ஷாத்கரித்தவன் ஜராமரண மற்ற மோக்ஷநிலையை யடைகிருன் என்றும் அந்தர்யாமி சாக்ஷாத்காரத்தைத் தவிர்த்து வேறு எவ்வித கர்மாதிகளேச் செய்தபோதிலும் அந்தமோக்ஷம் கிடைப்பதரிது என்றும் உபதேசிக்கப்பட்டது.

பதினெட்டாவது ருக்

அ-கை. எல்லா அநுவாகத்தின் அர்த்தமும் சுருக்கமாக உபதேசிக்கப்படுகிறது.

यज्ञेन यज्ञमयजन्त देवाः। तानिधर्माणि प्रथमान्यासन्।
तेहनाकं महिमानस्सचन्ते। यत्रपूर्वे साध्यास्सन्तिदेवाः।

| | |
|---|---|
| देवाः | (பிரஜாபதி பிராணரூப) தேவர்கள் |
| यज्ञेन | மேற்சொல்லப்பட்ட மானச சங்கற்பத்தால் |
| यज्ञम् | மேற்சொல்லிய யக்ஞரூபமான பிரஜாபதியை. |
| अयजन्त | பூஜித்த (தியானித்த) னர் |
| तानि | அந்த |
| धर्माणि | ஜகத்ரூப விகாரங்களான தர்மங்கள் |
| प्रथमानि | பிரசித்தங்களாக |
| आसन् | இருந்தன |

இதுவரை சிருஷ்டியைப் பிரதி பாதிக்கும் மந்திரத்தின் அர்த்தமானது சங்கிரஹமாய் உபதேசிக்கப்பட்டது

இனிஉபாஸனை அதன் பலன் இவைகளைக்கூறும் மந்திரத்தின் அர்த்தம் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

| | |
|---|---|
| यत्र | எந்த விராட் பிராப்திரூபமான பரமபதத்தில் |

| | |
|---|---|
| पूर्वे | முன்னுள்ள |
| साध्याः | விராடுபாஸ்தியைச்சாதித்தவர்களான |
| देवाः | தேவர்கள் |
| सन्ति | இருக்கின்றனரோ |
| नाकम् | துக்கமற்ற பரமபதத்தை |
| ते | அந்த |
| महिमानः | விராட் உபாசகர்களான மஹாத்மாக்கள |
| सचन्ते | அடைகின்றனர |



पुरुषसूक्तं संपूर्णम्

ॐ

## अथोत्तरनारायणानुवाकः

अद्भ्यस्संभूतः पृथिव्यै रसाच्च। विश्वकर्मणस्समवर्तताधि।
तस्य त्वष्टा विदधद्रूपमेति। तत्पुरुषस्य विश्वमाजानमग्रे॥

| | |
|---|---|
| (यः) | (யாதொரு விராட்புருஷன்) |
| विश्वकर्मणः | ஜகத் கர்த்தாவான நாராயணனிடமிருந்து |
| अधि | அதிகமாக (எல்லாவற்றிற்கும்) முதலில் |
| समवर्तत | உண்டாயினனே |
| (सः) | (அவன்) |
| अद्भ्यः | ஜலங்களினின்றும் |
| पृथिव्यै | பூமியினுடைய |
| रसाच्च | சாராம்சத்தினின்றும் |
| संभूतः | அண்டரூபமான ஸ்தூல சரீரத்தையடைந்தான் |
| त्वष्टा | ஜகத் கர்த்தாவான நாராயணன் |
| तस्य | அந்த அண்டாபிமானி புருஷனுக்கு |
| रूपम् | பதினான்குலோக ரூபமான அவயவ விசேஷத்தை |
| विदधत् | செய்கின்றவராக |
| एति | பிரவிருத்தித்தார் |

पुरुषस्य — விராட் புருஷனுடையதான
तत् — அந்த
विश्वम् — தேவ மனுஷ்யாதிரூபமான சகல ஜகத்தும
अग्रे — (தனிததனியே உண்டாவதற்கு)முன்
आजानम् — (சமஷ்டிரூபமாக) உண்டாயிற்று.

தாத்பரியம்.—சர்வப் பிரபஞ்ச காரணபூதனுன நாராயணன் பிரபஞ்சததை சிருஷ்டிக்கத்தொடங்கி முறையே ஆகாசம முதலிய பஞ்சபூதங்களை சிருஷ்டிததுப் பிறகு அதினின்றும் பிரும்மாண்டத்தை யுண்டுபண்ணி அதில் பிரும்மாண்டாபிமானியான விராட்புருஷனை பிரவேசம் செய்வித்து அந்தாயாமியாய்த் தானும் அதில் பிரவேசித்து அபபிருமாண்டததினின்றும் அதன் அவயவஙகளான பதினான்கு லோகஙகளையும், அந்தந்த லோகங்களில் தந்தமது கன்மபலனையனுபவிக்கத்தக்க தேவர் மனுஷ்யர் முதலிய எண்பத்துநான்குலக்ஷம ஜீவராசிகளையும் சிருஷ்டித்தார் என்று இந்த மந்திரத்தால் உபதேசிக்கப் பட்டது.

இரண்டாவது ருக்

वेदाहमेतं पुरुषं महान्तम् । आदित्यवर्णं तमसः परस्तात् ।
तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था विद्यतेऽयनाय ॥

சென்ற அனுவாகத்திற் படிக்கப்பட்ட 16-வது ருக்குப்படி அர்த்தம் கண்டுகொள்க.

தா-ம்.—பிரும்மாண்டந் தொடங்கி நமது சரீரம் வரையிலுள்ள சகல ஜகத்தையும் சிருஷ்டித்தவனும், அப்ராகிருத சுத்த சத்வ வடிவமுள்ளவனுமான ஸ்ரீமந்நாராயணனுடைய உபாசனாத்மக தியானத்தாலன்றி மோக்ஷமடைவதற்கு வேறுவழி யில்லை என்று இம்மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது.

## மூன்றாவது ருக்

प्रजापतिश्चरति गर्भे अन्तः । अजायमानो बहुधा विजायते ।
तस्य धीराः परिजानन्तियोनिम्। मरीचीनां पदमिच्छन्ति वेधसः।

| | |
|---|---|
| प्रजापतिः | சர்வப்பிரபஞ்ச காரணபூதனான நாராயணன் |
| अन्तर्गर्भे | (பிரும்மாண்டத்தின்) நடுவில் |
| चरति | (திவ்விய மங்கள விக்கிரஹத்துடன்) சஞ்சரிக்கிறார் |
| (सः) | (அவர்) |
| अजायमानः | உண்மையில் ஜனனமற்றவராயிருந்த போதிலும் |
| बहुधा | பலவிதமாய் |
| विजायते | யாவரு மரியுமாறு அவதரிக்கிறார் |
| तस्य | சர்வாவதாரியான நாராயணனுடைய |
| योनिम् | சுவரூபத்தை |
| धीराः | மனதைத்தன்வசமாக்கின மகான்கள் |
| परिजानन्ति | நன்கு அறிகின்றனர் |
| वेधसः | சிருஷ்டிகர்த்தாக்கள் |

| | |
|---|---|
| (तमेव) | அவனையே |
| (उपास्य) | உபாசித்து |
| मरीचीनां | மரீசி, அத்ரி முதலிய மஹருஷிக ளுடைய |
| पदम् | ஸ்தானத்தை |
| इच्छन्ति | விரும்புகின்றனர். |

தா-ம்.—ஆதிகர்த்தாவான நாராயணன் உண்மையில் ஜனன தர்மமற்றவராயினும் தனது ஆக்ஞா ரூப வேதத்தால் வெளியிடப்பட்ட தர்மத்தை நிலை நாட்டவேண்டியும், அதர்மதனைப் போக்கவேண்டியும தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தில் அந் தந்தகாலத்திர்க் கேற்றவாரு அப்ராகிருத திவ்விய மங்கள விக்கிரஹத்துடன் அவதரிக்கின்றார் என்றும், இடையிலுள்ள சிருஷ்டிகர்த்தர்கள் யாவரும் அவரது தியானத்தாலேயே சிருஷ்டி சாமர்தயத்தை யடைகின்றனர் என்றும் இம்மந்திரத்தால் உபதேசிக்கப் பட்டது.

நான்காவது ருக்

यो देवेभ्य आतपति। यो देवानां पुरोहितः। पूर्वो यो देवेभ्यो जातः। नमो रुचाय ब्राह्मये। रुचं ब्राह्मं जनयन्तः।

| | |
|---|---|
| यः | எந்த நாராயணன் |
| देवेभ्यः | தேவர்களின் காரியத்தைச் சாதிக்க வேண்டி |
| आतपति | (அந்தந்த சமயத்தில்) நாலாபக்கங் களிலும் ஆவிர்ப்பவிக்கின்றாரோ |

| | |
|---|---|
| (किञ्च) | (மேலும்) |
| यः | எவர் |
| देवानाम् | தேவர்களுடைய |
| पुरोहितः | புரோஹிதரான பிருஹஸ்பதி வடிவமாயிருக்கின்றாரோ |
| यः | எவர் |
| देवेभ्यः | தேவர்களைக்காட்டிலும் |
| पूर्वः | முதலிலுண்டான ஹிரண்ய கர்ப்ப வடிவமாய் |
| जातः | ஆவிர்ப்பவித்தாரோ |
| रुचाय | சுவப்பிரகாசராயும் |
| ब्राह्मये | வேதத்தால் பிரதிபாதிக்கப்படுகின்றவராயுமிருக்கிற |
| तस्मै | அந்த நாராயணனுக்கு |
| नमः | நமஸ்காரமானது (இருக்கட்டும்) |

தா-ம்.—பிரபஞ்சகர்த்தாவான நாராயணன் தேவகாரியத்தைச் சாதிக்கவேண்டி பலசமயங்களிலும் ராமகிருஷ்ணாதி ரூபமாய் அவதரிக்கின்றாரென்றும், தேவ புரோஹிதரான பிருஹஸ்பதியும் ஹிரண்ய கர்ப்பரும் இவரது விபூதியென்றும் உபதேசித்து நமஸ்காரமாத்திரத்தால் பரிபூரணானுக்கிரஹஞ் செய்கின்றாரென்றும் இதனால் கூறப்பட்டது.

ஐந்தாவது ருக்

रुचं ब्राह्मं जनयन्तः । देवा अग्रे तदब्रुवन् ।
यस्त्वैवं ब्राह्मणो विद्यात् । तस्य देवा असन्वशे ॥

| | |
|---|---|
| देवाः | தேவர்கள் |
| अग्रे | சிருஷ்டியின் முதலில் |
| ब्राह्मम् | பரப்ருமமோபாசனத்தாலுண்டான |
| रुचम् | காந்தியை (சநதோஷக்குறியை) |
| जनयन्तः | வெளியிடுகின்றவர்களாய்க்கொண்டு |
| तत् | அந்த (பிருமமதத்துவத்தை நோக்கி) |
| अब्रुवन् | சொலலத தொடங்கினர் |
| (हेपरमात्मन्) | (ஓ பரம புருஷனே) |
| यः | யாதொரு |
| ब्राह्मणः | பிரும்மோ பாசனஞ் செய்கின்றவன் |
| त्वा | உம்மை |
| एवम् | முன சொன்ன விதமாக |
| विद्यात् | அநுசந்தானஞ் செய்வானோ |
| तस्य | அவனுடைய |
| वशे | ஆதீனத்தில் |
| देवाः | தேவர்கள் |
| असन् | இருக்கின்றனர் |

தா-ம். ஜகத் சிருஷ்டியைச் செய்யத் தொடங்குங்காலத்தில் பரமாத்மாவை உபாசனஞ் செய்ததால் விசேஷத் திறமையைப பெற்ற தேவர்கள் தங்களது அநுபவத்தை பரமாதமா வினிடம் பின் வருமாறு தெரிவித்துக் கொண்டனர்—"ஓ பரம புருஷனே! எவன் தங்களை சகல ஜகத்தையும் படைத்தவராகவும் சர்வஜகத் அந்தர்யாமி யாகவும் உபாசிக் கின்றானோ அவனுக்கு தேவர்கள் யாவரும் வசமாகின்றனர். ஆகவே தஙகளது உபாசனையின மகிமையைச் சொல்

லவும் முடியுமோ ?" என்று இதனால் உபதேசிக்கப் பட்டது.

ஆறுவது ருக்

ह्रीश्चते लक्ष्मीश्च पत्न्यौ । अहोरात्रे पार्श्वे ।
नक्षत्राणिरूपम् । अश्विनौ व्यात्तम् ॥ इष्टं मनिषाण । अमुं
मनिषाण । सर्वं मनिषाण ॥

| | |
|---|---|
| (हेपरमात्मन्) | (ஓ பரம புருஷனே !) |
| ह्रीश्च | லஜ்ஜைக்கு அபிமானி தேவதையான லஜ்ஜா தேவியும் |
| लक्ष्मीश्च | ஐச்வர்யத்திற் கபிமானி தேவதை யான லக்ஷ்மீதேவியும் |
| ते | உம்முடைய |
| पत्न्यौ | பத்னிகள் |
| अहोरात्रे | பகல் இரவுகள் |
| पार्श्वे | இரண்டு பக்கங்களாகின்றன |
| नक्षत्राणि | ஆகாசத்திற் காணப்படும் நக்ஷத்திர ங்கள் |
| रूपम् | சரீரமா யுள்ளவை |
| अश्विनौ | தேவவைத்தியர்களான அச்வினீ தே வர்கள் |
| व्यात्तम् | விரிந்தமுகமா யுள்ளவர்கள் |
| इष्टम् | எங்களால் விரும்பப் பட்டதை |
| मनिषाण | கொடுக்க வேண்டும் |
| अमुम् | லோகத்திற் காணப்படும் பசு முத லியவற்றை |

मनिषाण கொடுக்க வேண்டும்
सर्वम् இம்மை மறுமையிலுள்ள யாவையும்
मनिषाण தந்தருள் புரியவேண்டும்

தா-ம். எவன் ஹ்ரீதேவி, லக்ஷ்மீதேவி, இவர்களை பரமாத்மாவின் பத்னிகளாகவும், இரவு பகல்களை இரண்டு பக்கங்களாகவும், ஆகாயத்திற் காணப்படும் நக்ஷத்திரங்களை அவரது சரீரமாகவும், அச்வினீதேவர்களை அவரது விரிந்த முகமாகவும் உபாசிக்கின்றுனே அவன் பகவத் பிரசாதத்தைப் பெற்று அதனுல் இம்மை மறுமைகளில சகல க்ஷேமங்களையும் அடைகிருன் என்று இதனுல் உபதேசிக்கப் பட்டது.

---

## अथ महानारायणानुवाकः

அ-கை.—இந்த அநுவாகத்தில் ஹிருதயபுண்டரீகத்தில் உபாஸ்யனை நாராயணனுடைய குணவிசேஷங்கள் விரிவாய் உபதேசிக்கப் படுகின்றன.

सहस्रशीर्षं देवं विश्वाक्षं विश्वशंभुवम्
विश्वं नारायणं देवमक्षरं परमं पदम् ॥

नारायणम् நாராயணனை
सहस्रशीर्षम् ஆயிரக் கணக்கான (அளவு கடந்த) சிரஸ்ஸை யுடையவராகவும்
देवम् சுவப்பிரகாச ராகவும்
विश्वाक्षम् எங்கும் கண்ணுள்ளவ ராகவும்

| | |
|---|---|
| विश्वशंभुवम् | சகல ஜகத்திற்கும் சுகத்தைத் தருகின்றவ ராகவும் |
| विश्वम् | சகல ஜகத் சரீரியாகவும் |
| देवम् | எல்லாத் தேவர்களையும் அங்கமாயுடையவராகவும் |
| अक्षरम् | எங்குந் நிறைந்தவராகவும், அல்லது நாசமற்றவ ராகவும் |
| परमम् | எல்லாவற்றிற்குங் காரணபூதராகவும் |
| पदम् | ஆச்ரயிக்கத தகுந்தவராகவும் |
| (ध्यायेत्) | (தியானஞ் செய்யவேண்டும்) |

இரண்டாவது ருக்

विश्वतः परमान्नित्यं विश्वं नारायण ँ हरिम्।
विश्वमेवेदंपुरुषस्तद्विश्वमुपजीवति ॥

| | |
|---|---|
| (भगवन्तम्) | (பரம புருஷனை) |
| विश्वतः | ஜடரூபமான ஜகத்தைக் காட்டிலும் |
| परमात्(1) | மேலானவராகவும் |
| नित्यम् | விநாசமற்றவராகவும் |
| विश्वम् | சர்வாத்மக ர› கவும் |
| नारायणम् | சகலஜீவர்களிடமும் அந்தர்யாமியாக இருப்பவராகவும், அல்லது சகல ஜீவசமூகத்திற்கும் நியந்தாவாகவும் |

---

(1) வேத மானபடியால், த்விதீயா விபக்தி வரவேண்டிய இடத்தில் பஞ்சமீவிபக்தி வந்திருப்பதா யறியவேண்டும்.

हरिम् — தன்னை உபாஸிப்பனுடைய பாபத்தைப் போக்குகின்றவராகவும்

इदम् — பிரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் அறியப்படுகிற

(यत्) विश्वम् — யாதொரு ஜகத் உண்டோ

तद्विश्वमेव — அந்த ஜகத்தையே

पुरुषः — புருஷபத வாச்யனை நாராயணன்

उपजीवति — ஆச்ரயிக்கிறார் என்பதாகவும்

(ध्यायेत्) — (தியானஞ் செய்யவேண்டும்)

தா-ம். யாவராலும் ஆச்ரயிக்கத் தகுந்த ஸ்ரீமந் நாராயணன் தன்னை ஆச்ரயிக்கும் பிரபஞ்சத்தைத் தான் ஆச்ரயிக்கிறார் என்றதால் அவர் ஸௌலப்ய குணம் நிறைந்தவரென்றும், பரமதயாமூர்த்தியென்றும், அவருடைய உபாசனமானது சகலக்ஷேமத்தையுந் தரும் என்றும் இதனால் உபதேசிக்கப் பட்டது.

குறிப்பு—முதல் மந்திரத்தால் பிரதிபாதிககப் பட்ட சில குணங்களை இம்மந்திரததிலும் திருப்பிச் சொல்லி யிருப்பதற்கு பகவானை இவ்விரண்டுருக்குகளிலும் கூறப்பட்ட குணவிசேஷ விசிஷ்டனாகவே உபாசனஞ் செய்யவேண்டு மென்பதை வற்புருத்துவதில்தாத்பர்யங் கொள்ள வேண்டும்.

மூன்ருவது ருக்

पतिं विश्वस्यात्मेश्वर ँ शाश्वत ँ शिवमच्युतम्।
नारायणं महाज्ञेयं विश्वात्मानं परायणम्॥

| | |
|---|---|
| विश्वस्य | ஜகத்திற்கு |
| पतिम् | (பாலகனைதுபற்றி) பதியாகவும் |
| आत्मेश्वरम् | (சகல)ஜீவர்களுக்கும் நியந்தாவாகவும் |
| शाश्वतम् | எப்பொழுதும் நிலைத்திருக்கின்றவராகவும் |
| शिवम् | பரம மங்களரூபியாகவும் |
| अच्युतम् | பக்தர்களைக்கைவிடாதவராகவும் |
| नारायणम् | ஜீவசமூகத்திற்கு அந்தர்யாமியாகவும் |
| महाज्ञेयम् | அறியவேண்டிய தத்துவங்களுள் சிறந்ததத்துவமாகவும் |
| विश्वात्मानम् | சேதனு சேதன ரூபமான ஜகத்தை சரீரமாயுடையவராகவும் |
| परायणम् | பரமப்பிராப்யராகவும் |
| (ध्यायेत्) | (தியானஞ் செய்யவேண்டும்) |

தா-ம். ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ் செய்யும் பொழுது, சர்வஜகத் பாலகனுகவும், சர்வ ஜீவாந்தர்யாமி யாகவும், எக்காலத்திலு முள்ளவராகவும் மேலான மங்களத்தைத் தருகின்றவராகவும், அறிய வேண்டிய தத்துவங்களுள் சிறந்த தத்துவமாகவும் சேதனு சேதனரூபமான சகல ஜகத்தையும் அவரது சரீரமாகவும், அவரே பரமப் பிராப்ய ரென்றும் தியானஞ் செய்ய வேண்டுமென்று இதனுல் உபதேசிக்கப்பட்டது.

தல் முடிவரை ஜபிக்க சாவகாச மில்லாவிடில் இந்த சுலோகத்தையாவது அர்த்தானுசந்தானத்துடன் அவரவர்கள் சத்திக்குத்தக்கவாறு ஜபித்துவந்தால் இம்மையிலும் மறுமையிலும் சுகத்தைப் பெறலாம்.

विष्णुपत्नीं क्षमां देवीं माधवीं माधवप्रियाम् ।
लक्ष्मीं प्रियसखीं देवीं नमाम्यच्युत वल्लभाम् ॥

| | |
|---|---|
| विष्णुपत्नीम् | மஹாவிஷ்ணுவின் பார்யையா யிருப்பவளாயும் |
| क्षमाम् | (பக்தர்களின் அபராதங்களை) பொறுத்துக் கொள்பவளாயும் |
| देवीम् | பிரகாசிக்கின்றவ ளாயும் |
| माधवीम् | வசந்த காலத்தில் விசேஷ சான்னித்யம் செய்பவளாயும் |
| माधवप्रियाम् | மஹாவிஷ்ணுவின் ப்ரீதிக்குப் பாத்திரமா யிருப்பவளாயும் |
| प्रियसखीम् | தனதுபக்தர்களிடத்தில் தோழியைப் போல் நடப்பவளாயும் |
| देवीम् | பிரகாசிக் கின்றவளாயும் |
| अच्युतवल्लभाम् | மஹா விஷ்ணுவின் பார்யையாயும் இருக்கிற |
| लक्ष्मीम् | லக்ஷ்மீதேவியை |
| नमामि | நமஸ்காரஞ் செய்கிறேன் |

குறிப்பு.— பக்தியின் மேலீட்டால் இம்மந்திரத்தில் ஒருதரம் குறிப்பிட்டவிஷயமே மறுபடியும் திருப்பிச் சொல்லப்பட்டிருப்பதாய்க் கருதவேண்டும்.

महालक्ष्मी च विद्महे विष्णुपत्नी च धीमहि ।
तन्नो लक्ष्मीः प्रचोदयात् ॥

**विष्णुपत्नीच** விஷ்ணுவின் பார்யையான ஸ்ரீதே வியை

**धीमहि** தியானஞ் செய்கிறோம்

**(तदर्थम्)** (அதர்க்காக)

**महालक्ष्मीच** மஹா லக்ஷ்மியை

**विद्महे** வேதம், சாஸ்திரம், குருப தேசம் இவைகளால் தெரிந்து கொள்ளு கிறோம.

**तत्** அவளைத் தெரிந்து கொள்வதற்கு

**लक्ष्मीः** லக்ஷ்மிதேவி யானவள்

**नः** எங்களை

**प्रचोदयात्** தூண்ட வேண்டும

தா-ம்.—"**यमेवैषवृणुते तेनलभ्यः**" (எவன் விஷயத்தில் ஸ்ரீதேவியானவள் "இவன் நமது சுவரூபாதிகளைத் தெரிந்துக்கொண்டு த்யானஞ்செய்து க்ஷேமத்தை யடையட்டும்" என்று சங்கற்பிக்கிறாளோ அவனாலேதான் இவளது சுவரூபாதிகள் அறியப்படும்) என்று கடோபனிஷத்தில் உபதேசித்தபடி ஸ்ரீதேவியின் சுவரூப சுவபாவாதிகளைத் தெரிந்துக்கொள்வதும் அவளது பிரசாதாதீனமென்று உபதேசிக்கப் பட்டது. இதை "லக்ஷ்மீ காயத்ரீ" என்று கூறு

வார்கள். ஆதலால் இதை மட்டும் ஜபித்தாலும் விசேஷபலனைப் பெறலாம்.

श्रीर्वर्चस्स्वमायुष्यमारोग्यमाविधाच्छोभमानं महीयते ।
धान्यं धनं पशुं बहुपुत्रलाभं शत ँ संवत्सरं दीर्घमायुः ॥

| | |
|---|---|
| श्रीः | ஸ்ரீதேவி யானவள் |
| महीयते | பக்தனை எனக்கு |
| शोभमानम् | பிரகாசிக்கின்ற |
| वर्चः | சரீர காந்தியையும் |
| स्वम् | பணத்தையும் |
| आयुष्यम् | ஆயுஸ்ஸையும் |
| आरोग्यम् | ரோகமில்லாமையையும் |
| धान्यम् | உணவுப் பொருள்களையும் |
| धनम् | சம்பத்தையும் |
| पशुम् | பசுவையும் |
| बहुपुत्रलाभम् | அநேகபுத்திர ப்ராப்தியையும் |
| शतम् | நூறு |
| संवत्सरम् | வருஷம் |
| दीर्घम् | நீண்ட |
| आयुः | ஆயுஸ்ஸையும் |
| आविधात् | செய்யவேண்டும்(கொடுக்கவேண்டும். |

शुभमस्तु। महालक्ष्मीः प्रीयताम् ॥

---

# துர்க்கா சூக்தம்

## முகவுரை

'துர்க்கா' என்பவள் சர்வ ஜகந்மாதாவான ஸ்ரீ ராஜ ராஜேச்வரியின் அவதார விசேஷமென்பதை மந்திர ஆகம சாஸ்திரங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன. ஆகவே இந்த துர்க்காதேவியின் சுவரூப சுவபாவகுணாதிகளைச் சொல்லும் வேத மந்திரத்திற்கு 'துர்க்காசூக்தம்' என்று பெயர். இந்தத் துர்க்கா சூக்தமானது ஐந்து ருக்குள்ளதென்று சிலரும் 7-ருக்குள்ளதென்று சிலருஞ் சொல்லு கின்றனர்.

இந்தத் துர்கா சூக்தத்தில் **तामग्निवर्णाम्** என்ற இரண்டாவது ருக் ஒன்றே ஸ்ரீ துர்க்காதேவியின் சுவபாவாதிகளைத் தெரிவிக் கின்றது. ஏனைய 6-ருக்குகளும் துர்க்காதேவியின் பதியான மகாதேவனின் சுவரூபத்தைப் போதிக்கின்றன. ஆகவே பிரபஞ்ச மாதா பிதாக்களான துர்க்காபரமேச்வரர்களுடைய பிரசாதத்தை யடைய வேண்டிய ஜீவன் அவ்விருவர்களின் பிரசாத ஜனகமான இந்த சூக்தத்தைப் பாராயணஞ் செய்து வருவானேல் ஊழ்வினையின் பயனாய் இந்த ஜன்மத்தில் நேர்ந்துள்ள சகல பாபங்களையும் விலக்கிக் கொண்டு அவ்வாதி தம்பதிகளின் பிரசாத பாத்திரனாய் இம்மையில் சகல க்ஷேமங்களையுமடைந்து மறுமையிலும் சகல க்ஷேமங்களையு மடையலாம் என்பது இந்தசூக்தத்தின் அர்த்தவிசாரஞ் செய்வதிலிருந்து ஏற்படுகிறது.

சங்கை. இந்த ஸூக்தமானது துர்க்கா பரமேசுவரர்களின் சுவரூபாதிகளைப் பொதுவாய்ச் சொல்வதாயிருந்தால் "ஸ்ரீ துர்க்கா ஸூக்தம்" என்ற தனிப்பெயர் கொண்டு அழைக்கப படுவதின் காரணம் என்னை.

உத்தரம. உலக சம்ரக்ஷணம் என்ற காரியத்தில் இருவருஞ சமப்பிரதானர்களாயிருநதபோதிலும் இவ்வுலகில் கஷ்டத்தை யடைநத குழந்தைகள் பெரும்பாலும மாதாவினிடமே தனதுகஷ்டங்களைத் தெரிவித்துக் கொள்வது வழக்க மாதலாலும், ஜநிததது முதல் நல்ல அறிவும் வியாபகத் தன்மையும் வரும் வரை ஒவ்வொரு கஷ்டகாலங்களிலுமு மாதாவே முன் வந்து துக்கங்களைப போக்கின தனது அநுபவமிருப்பதாலும், வேதத்திலும் பூஜிக்கவேண்டியவர்களை யுபதேசிக்குமிடத்து முதலில "मातृदेवो भव" (தாயைத் தெய்வமாக எண்ணு) என்று சொல்லும் வழக்கமிருப்பதாலும் ஆதிதம்பதிகள் இருவருக்குமே இநத ஜீவனை ரக்ஷிக்கவேண்டிய பொருபபானது சமப்பிரதானமா யிருந்தபோதிலும ஜகநமாதாவான துர்க்காதேவியாரையே தனது ரக்ஷணத்திற்கு முக்கிய இலக்கியமாககொண்டான் என்றும, அவ்விதங் கொள்வதும் நியாயந்தானென்றும் காட்டவே துர்க்கா ஸூக்தம் என்ற தனிப்பெயரால் அழைக்கப் படுவதாகக் கொள்ள வேண்டும்.

சங்கை. இந்த துர்க்கா ஸூக்தத்தில் "जातवेदाः, अग्निः" முதலிய பதங்களை அடிக்கடி படிக்கப்பட்டிருப்பதிலிருந்தும் "अग्निः जातवेदाः" என்ற முடிவைக்

கொண்டும் 'ताम ग्निवर्णाम्' என்ற இரண்டாவது ருக்கைத் தவிர பாக்கியுள்ள 6-ருக்குகளிலும் அக்கியின் பிரார்த்தனையே செய்யப்பட்டதாக ஏற்பட்டதே யொழிய துர்காபதியும் பிரபஞ்சபிதாவுமான ஸ்ரீ பரமேசுவரனின் சுவரூபாதிகளை யுபதேசிப்பதாகச் சொல்வது எவ்விதம் பொருந்தும்.

உத்தரம்—"नावेव सिंधुम्" என்ற திருஷ்டாந்த வாயிலாக "विश्वादुरितानि अतितर्षत्" (எல்லாத் துரிதங்களையும் போக்கட்டும்)என்று பலதடவைதிருப்பிச் சொல்லியிருப்பதால் வெளியாகுஞ் ஜனன மரணரூபமான சம்சார சமுத்திரத்தால் உண்டான சகல துக்க நிவிருத்திசெய்யுந் தன்மையும், "अस्माकं तनूनामविता बोधि" எங்களுடைய சரீரத்தை ரக்ஷிப்பவரென்றும், அதற்குரிய க்ஞானமுள்ளவர் என்றும் கூறினதால் வெளியாகுஞ் சர்வ ஜீவாந்தர்யாமியா யிருக்குந் தன்மையும் "अध्वरेषुकंप्रत्नोषि" (யாகங்களில் பலனைத்தருகின்றீர்)என்றதால் ஏற்படும் கர்மபலனைக்கொடுக்குந் தன்மையும் "नाकस्य पृष्ठमभिसंवसानः" (நாகம் என்ற பரமபதத்தில் வசிக்கின்றவனாய்) என்றதால் பரமபதமென்ற உத்தம பதவியை உபாஸகர்களுக்குத் தருந் தன்மையுமான பரமேசுவரனிடத்திலேயேபொருத்தமுள்ள லிங்கங்களைக் கொண்டு அக்நி, ஜாதவேதஸ் என்ற பதத்தின் ரூடியை மாற்றி जात= உண்டான वेदः= ஞானத்தை யுடையவர் (அதாவது சர்வஞ்ஞர்) अग्निः= எல்லாவற்றிற்கும் முன்னுள்ளவர் என்று, अकाशस्त लिङ्गात् என்ற இடத்தில் வாக்கிய சேஷத்

தில் கூறபபட்ட அசங்குசித சர்வஜகத் காரணதவம் என்ற லிங்கத்தைக்கொண்டு आकाश என்ற பததகின் ரூடியை மாற்றி आ= நாலு பக்கத்திலும் काश பிரகா சிக்கின்றவர் என்று பொருள் செய்திருபபதுபோ லவே ரூடியைத்தள்ளி யௌகிகமான அாத்தத்தை இங்குக் கொள்ளவேண்டியதாகவும ஏற்படுகிறது.

சஙகை "अग्निः, जातवेदाः" என்ற சுருதியை வாக்கி யசேஷததிற் சொல்லிய பரமேச்வர அசாதாரண லிங் கங்களைக் கொண்டு வேறு விதமாக நயனஞ் செய்வது போலவே अग्नि முதலிய சுருதியையே முக்கிய மாகக் கொண்டு மேற்கூறிய லிஙகஙகளை வேறுவிதமாக மாற் றக்கூடாதோ வெனின்.

உத்தரம். நாகதனைத் தருந்தன்மை, மிச்சமின்றி எல்லாத் துக்கம, பாபம இவைகளைப போக்குந் தன்மை, கர்மபலனைக்கொடுக்குநதன்மை, பொது வாய் யாவர்க்கும் பயத்தையுண்டாக்குநதன்மை முதலிய லிஙகங்கள அக்நியினிடம் எவவிதமும பொரு ந்தாது. ஆனதுபற்றி அவைகளையே அடியோடு பரித் தியாகஞ் செய்ததாகவும ஏறபடும்

அஃதுடன துக்கத்தால வாடி சர்வதுக்க நிவிருத் தியைப் பிரார்த்திக்கும ஜீவனுக்கு ஏதோ சிலதுககம விலகினுற் போதுமெனற எணணமானதுஒரு பொழு தும் பெரும்பாலும் உண்டாவதில்லை. அதை யொட் டியும் தனது சாவதுக்கங்களையும் விலககுஞ சக்தி வாய்நத ஒரு தேவதையையே அவன் தியானஞ்செய்

கிறுனென்றும், அவ்விதம் சர்வதுக்க நிவிருத்திசெய் யுந்தன்மை முதலியன பரமேசுவரனிடமே சுவரசமா ய்ப் பொருந்து மாதலாலும் अग्नि என்ற பதத்திலுள்ள ரூடியை விட்டு யௌகிகமான பொருள் கொள்ளுதல் அவசியமாக ஏற்படுகின்றது. மேலும் यादृशी भावना यत्र सिद्धिर्भवति तादृशी, तं यथा यथोपासते तथैवभवति என்ற நியாய பூர்வகவசனப்படி சர்வ துக்கநிவிருத்தி செய் தல் முதலிய கல்யாண குணங்கள் நிறைந்த துர்க்காபரமேசுவரர்களின் தியானத்தாலேயே அவ் வித தியானத்திற் கநுகுணமான சர்வதுக்க நிவிருத் தியை யடைருகின் என்று சொல்வதை விட்டு துர்க் கையின் ஆவிர்ப்பாவாதிகரணமான கேவலாக் நியை அவனிடம் இல்லாததும், ஒரு சமயத்திலும் பொருந்தாதது மான குண விசேஷங்களுடன் துதி செய்தலானது ஆச்ரயத்வாரா ஆச்ரயிக்கு வரு மென்றும் வைத்து துர்க்கையையே ஸ்துதிசெய்த தாகக் கொள்வதில் वैरोचनीम्, कर्मफलेषुजुष्टाम्, वैष्णवीम् முதலிய பதங்களாற் போதிக்கப்படும் நித்ய சித்த பரமேச்வர சம்பந்தத்தை அடியோடு மறந்து கேவல துர்க்கைக்கே நேரில் அவ்வித சக்தியைக் கற் பிப்பதாக ஏற்படுவதுடன், சக்திவிசிஷ்டசிவத்யான த்தாலேயே சர்வக்ஷேமத்தையுமடைந்தனர் என்று ஸ்காந்தம் நாகர கண்டத்தில் ஸோமாஸ்கந்த மூர்தித் யானத்தாலேயே இந்திராதி தேவர்கள் சகலக்ஷேமத் தையு மடைந்திருப்பதாகக் கூறப்பட்டிருப்பதால் அவ்வுபப் பிர்ம்மணத்தையும், சக்திவிசிஷ்ட சிவத்யா னஞ்செய்தலே சர்வ க்ஷேமத்தையுந் தருமென்று

வற்புறுத்தி உபதேசிக்கும் மந்திர சாஸ்திரமுறையை யும் விட்டதாக ஏற்படும். ஆகவே இந்தத் துர்க்கா சூக்தத்தால் 1, 3, 4, 5, 6, 7, இந்த ருக்குகளால் பர மேச்வர அசாதாரண குணவிசேஷ பிரதிபாதன பூர்வ கம், பரமேசுவரானுசந்தானமும், இரண்டாவது மந் திரத்தால் துர்க்காதேவியின் அசாதாரண மஹிமானு சந்தான பூர்வகம் துர்க்காதேவியின் தியானமும் சொல்லப் பட்டதாகக் கொள்ளல் வேண்டும்.

ஆகவே இவ்விதமஹாபலனைத்தரத்தக்க இந்த மந்திரத்திற்கு சாயணாசாரியர் பாஷ்யம் செய்யு மிடத்து **अथानिष्टपरिहारार्थत्वेन जप्यामन्त्राः** (பிறகு அநி ஷ்ட பரிஹாரத்திற்காக ஜபிக்கவேண்டிய மந்திரங் கள்)என்று அவதாரிகை செய்திருப்பதாலும், மஹா ன்களான மஹரிஷிகளால் செய்யப்பட்ட சோதிட சாஸ்திரத்தில், எந்த ஜாதகத்திலும் சந்திரன், சுக்கி ரன், சனி, ராகு இவர்கள் 3, 6, 8, 11, 12, க்குடைய வர்களாகவோ, அல்லது அவ்விடத்திலிருந்தோ, அல் லது ஜந்மானு ஜந்மத்ரி ஜந்மநக்ஷத்திரங்களுக்கு 3, 5, 7, 9, இந்த நக்ஷத்திரபதிகளாகி அந்தத் திசை புக்தி அந்தரம் இவைகள் நடந்தோ கோசரத்தில் ஜந்மானு ஜந்மத்ரி ஜந்ம நக்ஷத்திரங்களுக்கு 3, 5, 7, 9, வது நக்ஷத்திரங்களில் வக்கிர அஸ்தங்கத தோஷமடைந் தோ சஞ்சரிக்கும் பொழுது ஜந்மலக்கினம், சந்திர லக்கினம், தசாநாதர் பாவநாதர் இவர்களிருக்குமிடம் இவற்றிர்க்கு மேலேகண்ட கிரஹங்கள் எந்த பாவாதி பதிகளாக ஆகி எந்த பாவத்தில் சஞ்சரிக்கின்றன

ரோ அந்தபாவங்களுக்கு மேலேகண்ட கிரஹங்களின் திசாபுக்தி அந்தரம் கோசரம் இவைகளில் வருந் தோஷத்தை விலக்கவேண்டி இம்மஹாமஹிமைபொருந்திய துர்க்கா சூக்தபாராயணத்தை விதித்திருப்பதாலும் அவ்விதம் பாராயணஞ் செய்யும்பொழுது அர்த்தானு சந்தானத்துடனும் பாராயணஞ் செய்வதால் अर्थज्ञइत्सकलं भद्रमश्नुते " என்றபடி சகலக்ஷேமத்தையுமடையலாம் என்றதை யொட்டி இதை யாவர்க்கும் பயன்படுமாறு எளியதமிழ் நடையில் மொழிபெயர்த்திருக்கிறோம். இந்தத்துர்க்கா சூக்தத்தைப் பாராயணஞ் செய்வதுடன் துர்க்காதேவியின் பிரதிமாபூஜையுஞ் செய்யவேண்டியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்முறையை துர்க்காபூஜாவிதானம் என்ற கிரந்த மொழி பெயர்ப்பில் விரிவாய்க் கூறுவதாகவும் சங்கற்பித்திருக்கிறோம் ஆகவே ஆஸ்திகசிகாமணிகள் யாவரும் நமது இந்தக்காரியத்தில் இடையிடையே நேர்ந்துள்ள தென்மொழி இலக்கணவழுக்களைச் சற்றேனும் பொருட்படுத்தாது குறிப்பான நமது நோக்கங்கள் சபலமாகும்படி பலதுறைகளிலும் உதவிபுரியுமாறுங் கேட்டுக்கொள்ளுகிறோம்.

இப்படி,

மகாமகோபாத்தியாய வேதாந்தகேசரீ
பிர்ம்மஸ்ரீ கணபதி சாஸ்திரிக ளவர்களின் சிஷ்யரும்
வியாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும்
சோதிடசாஸ்திர பாரங்கதருமான
பிர்ம்மஸ்ரீ, கடலங்குடி, பண்டித நடேச சாஸ்திரிகள்,
495, தங்கசாலை தெரு, P. T. மதருஸ்.



## श्रीदुर्गायै नमः

## श्रीदुर्गासूक्तम्.

அவதாரிகை.—अथानिष्टपरिहारार्थत्वेन जप्यामन्त्राः, तत्र प्रथमामाह (பிறகு அநிஷ்ட பரிஹாரத்திற்காக ஜபிக்கவேண்டிய மந்திரங்கள் படிக்கப்படுகின்றன. அவற்றுள் முதல் ருக்கைச் சொல்லுகிறார்).

ओं जातवेदसे सुनवाम सोममरातीयतो निदहातिवेदः ।
सनः पर्षदति दुर्गाणि विश्वा नावेव सिंधुं दुरितात्यग्निः ।

| | |
|---|---|
| वेदः | சர்வக்ஞராயிருக்கிற |
| (यः) | (எந்தப் பரமேசுவரன்) |
| अरातीयतः | (எங்களிடத்தில்) சத்துருத் தன்மையைச்செய்ய விருப்பமுள்ளவர்களை |
| निदहाति | நாசஞ் செய்கின்றாரோ |
| सोमम् | சந்திரனை (சிரஸ்ஸில் தரித்தவரும்) |
| जातवेदसे | நித்ய சித்தஞ் ஞானமுள்ள வருமான |
| (तस्मै) | அந்தப் பரமேசுவரனின் பொருட்டு |
| सुनवाम | ஸ்தோத்திரஞ் செய்வோமாக |
| अग्निः | தன்னையுபாசிப்பவர்களை மேலான நிலைக்குக் கொண்டு வருகிறவரான |
| सः | அவர் |
| नः | எங்களுடைய |
| विश्वा | சமஸ்தமான |
| दुर्गाणि | கஷ்டங்களையும் |
| अतिपर्षत | நன்றாய் நாசஞ் செய்யட்டும் |

(किञ्च) (மேலும்)
नावा கப்பலால்
सिंधुमिव சமுத்திரத்தைப் போல
दुरिता பாப சமுத்திரத்தி னின்றும்
अति (तारयेत्) நன்றாய் (கரையேற்றட்டும்)

தா-ம்—"ईशानस्सर्वविद्यानाम्" (எல்லா வித்தைகளுக்கும் ஈசன்) என்றபடி சகல வித்யாப்பிரவர்த்தகராயும், சுயம் எல்லாவற்றையு மறிந்தவராயும், தன்னை யுபாஸிப்பவர்களை மேலான நிலையிற் கொண்டு வருகிறவராயும், சந்திரகலையைச் சிரஸ்ஸில் அணிந்திருப்பதிலிருந்து தன்னை யுபாசிப்பவர்களின் தோஷங்களைக் கவனியாது குணத்தையே பாராட்டுந் தன்மையைவெளிக்காட்டுகின்றவராயுமிருக்கிற பரமேசுவரனை நான் துதிக்கின்றேன். என்றால் துதிக்கப்பெற்ற பரமசிவம் எனது பாவங்கள் யாவையும் போக்குவதுடன் அப்பாவங் காரணமாய் நேர்ந்துள்ள சகல துக்கங்களையும் அடியோடு நாசஞ்செய்து கப்பலோட்டி கப்பலைக்கொண்டு தன்னைவந்தடைந்த ஜனங்களை சமுத்திரதரணஞ் செய்விப்பது போல தயாமூர்த்தியான பரமேசுவரனும், அவரையேசரணடைந்த என்னை இச் சம்சார சாகரத்தினின்றும் கரையேற்றி யானடையவேண்டிய பதத்தைத் தருவாராக என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

तामग्निवर्णां तपसाज्वलन्तीं वैरोचनीं कर्मफलेषु जुष्टाम् ।
दुर्गां देवी ँ शरणमहं प्रपद्ये सुतरसि तरसे नमः ॥

| | |
|---|---|
| अग्निवर्णाम् | அக்கினியின் நிறமுள்ளவளாயும் |
| तपसा | தனது சரீரத்தின் சூடுகையால் |
| ज्वलन्तीम् | (தன்னை உபாஸிப்பவர்களின் சத்துருக்களை)ப் பொசுக்குகிறவளாயும் |
| वैरोचनीम् | பரமாத்மாவான பரமேசுவரனின் பார்யையாயும் |
| कर्मफलेषु | அந்தந்த கர்மஙகளின் பலன்களான, சுவர்க்கம், பசு, புத்திரன், சம்பத்து முதலியவைகள் கிடைப்பதற்காக |
| जुष्टाम् | உபாசகர்களால் பக்தியுடன் சேவிக்கப்பட்டவளாயும |
| ताम् | லோக வேத பிரசித்தையாயும் இருக்கிற |
| दुर्गाम् देवीम् | துர்க்காதேவியை |
| अहम् | நான் |
| शरणम् | சரணமாக |
| प्रपद्ये | அடைகிறேன் |
| सुतरसि | (சம்சாரசாகரத்தை) ச்சுலபமாகத் தாண்டும்படி செய்பவளே! |
| तरसे | (சம்சாரசாகரத்தை) கடபபதற்காக |
| (ते) | (உனக்கு) |
| नमः | நமஸ்காரமானது (இருக்கட்டும்) |

தா-ம் ஒபரப்பிர்ம்ம மஹிஷியான துர்க்காதேவியே! நன்ருய் ஜ்வலித்துககொண்டிருக்கும் அக்கிக்குச் சமானமான உருவத்துடன் எனது சத்துருக்க

ருக்கு முன்தோன்றி சரீரத்தின் உக்கிரமான காந்தி யாலேயே அவர்களை நாசஞ்செய்யவேண்டும். புத்தி ரகாமேஷ்டிக்குப் புத்திரனென்றும், ஜ்யோதிஷ்டோ மத்திற்கு சுவர்க்கமென்றும், இவ்விதம் தனித்தனி யே ஒவ்வொரு கர்மத்திற்கும் பலன்கள் உபதேசிக் கப்பட்டிருக்கின்றன. அப்பலன்கள்யாவும் தங்களை உபாசிப்பதாலேயே சித்திக்கவேண்டும். அதோடு இம்மையில் சுகமாய் வாழ்ந்து, மறுமையில் சுலபமா ய் மோக்ஷம் என்ற சிறந்த புருஷார்த்தத்தையும் பெ றவேண்டும். மஹான்களின் பிரசாதத்தைப்பெறுவ தற்குச்சரணம் புகுதலே உத்தமசாதன மாதலாற் றங்களைச் சரணமடைகிறேன். மேற் கோரியவை களை எனக்குக் கொடுத்தருளவேண்டும் என்று இத னல் பிரார்த்திக்கப்பட்டது.

மூன்ருவது ருக்

अग्ने त्वं पारया नव्यो अस्मान्त्स्वस्तिभिरति दुर्गाणि विश्वा।
पूश्च पृथ्वी बहुला न उर्वी भवा तोकाय तनयाय शंयोः ॥

| | |
|---|---|
| अग्ने | உபாசகர்களை மேலான நிலையிற் கொண்டு சேர்க்கின்ற பரமேசுவரனே! |
| नव्यः | துதிக்கத்தகுந்தவரான |
| त्वम् | நீர் |
| अस्मान् | (உபாசகர்களான) எங்களை |
| स्वस्तिभिः | க்ஷேமத்தைத் தரத்தக்க உபாயங்க ளால் |

| | |
|---|---|
| विश्वा | எல்லாவிதமான |
| दुर्गाणि | ஆபத்துக்களையும் |
| अति(लंघयित्वा) | தாண்டும்படி செய்வித்து |
| पारय | சமசாரசமுத்திரத்தின் கரையைய டையும்படிச் செய்யும் |
| (किञ्च) | (மேலும) |
| नः | எங்களுக்கு |
| (त्वत्प्रसादात्) | (தங்களது பிரசாதத்தால்) |
| पूश्च | வாசயோக்கியமான படடினமானது. |
| पृथ्वी | விஸ்தீர்ணமாக |
| भवतु | உண்டாகட்டும் |
| उर्वी | பயிர்களை யுண்டுபண்ணுவதற்கு யோக்கியமான பூமியும் |
| बहुला | அதிகமாக |
| (भवतु) | உணடாகட்டும் |
| (त्वञ्च) | (நீர்) |
| तनयाय | எனது சரீரத்திலுருந்து உண்டான புத்திரனுக்கும் |
| तोकाय | அவனது புத்திரனுக்கும் |
| शंयोः | சுகத்தைச் சேர்த்து வைக்கிறவராக |
| भव | ஆவீராக |

தா-ம். ஓபரமேசுவரனே! தாங்கள் உபாசகர்களை உயர்ந்தநிலையிற் கொண்டு சேர்க்கின்றவர்களாகையாற்றங்களையுபாசிக்கும் நாங்கள் இம்மையில் நேரக் கூடிய ஆபத்துக்கள்யாவையும் சுலபமான உபாயத் தாற்றாண்டி புத்திர பௌத்திராதிகளுடனும், விஸ்தா

ரமான வீடுவாசல் களுடனும், தான்னியங்கள் விளையு ம் பூமியினுடனும் சுகமாய் வாழ்ந்து மறுமையில் மோக்ஷமென்ற சிறந்த புருஷார்த்தத்தையும் அடை யும்படி அருள் புரியவேண்டும். அதற்காகத்தங்களை த்துதி செய்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப் பட்டது.

நான்காவது ருக்

विश्वानि नो दुर्गहा जातवेदस्सिंधुं न नावा दुरितातिपर्षि।
अग्ने अत्रिवन्मनसागृणानोऽस्माकं बोध्यविता तनूनाम्॥

| | |
|---|---|
| जातवेदः | ஓசர்வஞ் ஞானபரமேசுவரனே! |
| दुर्गहा | உபாசகர்களின் ஆபத்துக்களைப் போக்குகின்ற |
| (त्वम्) | (நீர்) |
| नावा | கப்பலால் |
| सिंधुन | சமுத்திரத்தைப்போல |
| नः | எங்களுடைய |
| विश्वानि | சமஸ்தமான |
| दुरिता | பாபங்களையும் |
| अतिपर्षि | நிச்சயமாகப் போக்குகின்றீர் |
| अग्ने | உபாசகர்களை மேலான நிலைக்குக் கொண்டு வருகின்றவரே! |
| अत्रिवत् | (1)ஆத்யாத்மிகம் முதலிய மூன்று துக்கங்களு மில்லாத ஜீவன் முக்த னை மகான்போல |

(1) பொதுவாய் ஜீவராசிகளுக்கு சம்பவிக்குந் துக் கம் आध्यात्मिकम्, आधिभौतिकम्, आधिदैविकम् எனமூன்

| | |
|---|---|
| (त्वमपि) | தாங்களும் |
| मनसा | மனத்தினால் |
| गृणानः | எனது க்ஷேமத்தைக் கோருகின்றவராகவும் |
| तनूनाम् | தங்கள் சரீரபூதர்களான |
| अस्माकम् | எங்களை |
| अविता | ரக்ஷிக்கின்றவராகவும் |
| बोधि | எங்கள் ரக்ஷணத்தில் சாவதானமுள்ளவராகவும் ஆகவேண்டும் |

தா-ம்.—यस्सर्वस्मिंस्तिष्ठन् सर्वमन्तरो यमयति" என்றும் " यस्य सर्वं शरीरम्" "आत्मनितिष्ठन्नात्मनोऽन्तरः" என்றும் உபதேசித்தபடி தாங்கள் சர்வாந்தர்யாமியாகவும் சர்வ சரீரியாகவு மிருப்பதாலும், சரீரபூதனை என்னிடத்திலுள்ள தோஷங்களை விலக்கி காப்பாற்ற வேண்டியதானது சரீரியான தங்களுடைய கடமையாயிருப்பதுடன் தங்களை யுபாசிக்கின்ற என்னுடைய ரக்ஷண விஷயத்தில் " आत्मौपम्येन सर्वत्र दयां कुर्वन्ति साधवः" (சாதுககள் தன்னையே திருஷ்

---

றுவகைப்படும். வியாதிபந்துவியோகம், பொருட்சேதம் முதலியவைகளால் ஏற்படும் துக்கம் आध्यात्मिकम् என்றும்; பாம்பு தேள் புலி கரடி முதலியவைகளால் உண்டாகுந்துக்கம் आधि भौतिकम् என்றும், அதிகமழை, மழையே பெய்யாதிருத்தல், இடி மின்னல் இவைகளால் ஏற்படும் துக்கம் आधिदैविकम् என்றும் சொல்லப்படும்.

டாந்தமாகக்கொண்டு அனைவரிடத்திலும் தயையைச் செலுத்து கின்றனர்) என்றும், **सर्वे च सुखिनस्सन्तु सर्वे सन्तु निरामयाः** (யாவருஞ் சுகிகளாக இருக்கட்டும், யாவரும் வியாதி யற்றவர்களாக ஆகட்டும்) என்றும் சொன்னபடி ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களற்ற ஜீவன் முக்தர்கள் போலவே தாங்களும் உண்மை யான பிரேமை கொண்டவர்களாய் பசு புத்திராதி களைத்தந்து இம்மையிலும், மோக்ஷவீட்டைத்தந்து மறுமையிலுங் காப்பாற்ற வேண்டுமென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

ஐந்தாவது ருக்

पृतनाजित ँ सहमानमुग्रमग्नि ँ हुवेम परमात्स्वधस्थात्।
स नः पर्षदतिदुर्गाणि विश्वाद्मामद्देवो अतिदुरितात्यग्निः।

| | |
|---|---|
| पृतनाजितम् | சத்ருசேனையை ஜயிக்கின்றவரும். |
| सहमानम् | (ஆனதுபற்றியே) சத்துருக்களை அவ மதிப்பவரும். |
| उग्रम् | (வழிதப்பி நடக்கும் யாவருக்கும்) பயத்தை யுண்டுபண்ணுகிறவரும் |
| अग्निम् | உபாசகனை மேலானநிலைக்குக்கொண் டுவருகிறவருமான உம்மை |
| परमात् | உத்கிருஷ்டமான |
| स्वधस्थात् | பரிவாரங்களுடன் சேர்ந்து வசிக்குமி டத்திலிருந்து(என்னைக் காப்பாற்ற வரும்படி) |

| | |
|---|---|
| **हुवेम** | அழைக்கிறோம் |
| **सः** | (எங்களால் அழைக்கப்பட்ட) அந்த பரமேசுவரன் |
| **नः** | எங்களுடைய |
| **विश्वा** | சமஸ்தமான |
| **दुर्गाणि** | கஷ்டங்களையும |
| **अतिपर्षत्** | நாசஞ் செய்யட்டும் |
| **अग्निः** | அகநி போலப்பிரகாச வடிவமானவரும் |
| **क्षामत्** | பொறுமையுள்ளவருமான |
| **देवः** | மகாதேவன் |
| **अतिदुरिता** | சமஸ்தபாபங்களையும் |
| **अति (लंघयेत्)** | போக்கட்டும் |

குறிப்பு—**भीषास्माद्वातः पवते** என்று தொடங்கி (வாயு முதலிய தேவர்கள் இவரிடமிருந்துண்டான பயத்தால் தங்தனது காாயத்தை வழுவாமல் நடத்துகின்றனர்) என்று உபதேசித்தபடியும், **नम उग्राय च भीमाय च** என்று ஸ்ரீ ருத்திராத்யாயததில் உபதேசித்தபடியும இந்த மந்திரத்திலும் சகல பயஹேதுவாயிருக்குந்தன்மை என்ற பரமேசுவரனின் அசாதாரண குணவிசேஷமானது **उग्रम्** என்ற பதத்தால உபதேசிக்கப்பட்டது

தா-ம—ஓ பரசிவ! **पूतनाजितम्** (சத்ரு சேனையை ஜயிக்கின்றவர்) என்றதாலும், **उग्रम्** (வழிதப்பி நடக்

கின்றவர்களுக்குப் பயத்தையுண்டாக்கி அவர்களை நல்வழி நடக்கச் செய்கின்றவர்) என்றதாலும் வெளியாகுஞ் சர்வசக்தனுயிருக்குந்தன்மையும், **परमात्स्वघस्थात्** (பரிவாரங்களுடன்மேலான பரமபதத்தில்வசிப்பவர்) என்றதால் வெளியாகும் பரமபத நாயகனு யிருக்குந் தன்மையும், **अग्निम्** (உபாசகர்களை மேலான நிலைக்குக் கொண்டு வருகின்றவர்) என்றதால் வெளியாகுந்தயையும் வாய்ந்தவர்களாய்ற்ருங்களிருப்பதால் பாபகர்மங் காரணமாய்ப் பலவிதத் துக்கங்களை யனுபவிக்குந் தீனனுன எனது அழைப்புக் கிணங்கி பரிவாரங்களுடன்வந்து பாபங்களையும் அது காரணமாய் நேர்ந்துள்ள அடியேனது சகல துக்கங்களையும் விலக்கி ஆட்கொள்ளவேண்டுமென்று இதனுல் பிரார்த்திக்கப் பட்டது.

ஆறுவது ருக்

प्रत्नोषि कमीडचो अध्वरेषु सनाच्च होता नव्यश्च सत्सि ।
स्वां चाग्ने तनुवं पिप्रयस्वास्मभ्यं च सौभगमायजस्व ॥

| | |
|---|---|
| अग्ने | ஓ பரமேசுவரனே! |
| अध्वरेषु | யாகங்களில |
| ईड्यः | துதிக்கத்தகுந்த வராயிருக்கிற |
| (त्वम्) | (நீர்) |
| कम् | (கர்மபலனுன) சுகத்தை |
| प्रत्नोषि | அதிகமாகக் கொடுக்கிறீர் |
| (किञ्च) | (மேலும்) |
| सनाच्च | கர்மபலனைக் கொடுப்பவராயிருப்பதுடன் |

| | |
|---|---|
| होता | ஹோமசாதனபூதராகவும் |
| नव्यश्च | துதிக்கத்தகுந்தவராகவும் |
| सत्सि | (யாக பூமியில்) வசிக்கிறீர் |
| अग्ने | ஓபரமேசுவர! |
| स्वाम् | சுவகீயமான |
| तनुवम् | சரீரத்தை |
| पिप्रयस्व | சொந்த ஹவிஸ்ஸினுல் திருப்திசெய்துகொள்ளும் |
| (ततः) | (அவ்விதம் திருப்தி செய்து கொள்வதி லிருந்து) |
| अस्मभ्यंच | எங்களுக்கும் |
| सौभगम् | பாக்கியத்தை |
| आयजस्व | பலவழிகளிலுந தந்தருளும் |

தா-ம். ஓ பரமேசுவர! தாங்கள் சர்வகர்மசமாராத்யராகவும்,சர்வகர்ம பலப்ரதாதாவாகவும,சர்வாந்தர்யாமியாகவு மிருப்பதுபற்றி होता முதலிய ருத்விக்குகளின் அந்தர்யாமியாகவு மிருந்து சுவாராதனமான கர்மாவை சுவயமே நடத்தி வைக்கின்றீர்கள். ஆகவே அந்தர்யாமியான தாங்கள தீனனுன அடியேன் செய்யுங் காரியங்களையும அவ்விதமே நடத்தி வைத்து அதன்மூலம் திருப்தி யடைந்த வாகளாய்க் கொண்டு சகலசௌபாக்யத்தைத் தந்து இம்மையிலும்,மோக்ஷத்தைத்தந்து மறுமையிலுங் கார்த்தருள் புரியவேண்டுமென்று இதனல் பிரார்த்திக்கப் பட்டது.

குறிப்பு—अध्वरेषु ईड्यः (யாகங்களில் துதிக்கத்தகுந்தவர்) என்றதால், சர்வகர்ம சமாராத்யனுயிருக்

குந் தன்மையும், कं प्रत्नोषि(கர்ம ஜன்யமான சுகத்தைத் தருகின்றவர்) என்றதால் फलमत उपपत्तेः (கர்மபலன் அவரிடமிருந்தே உண்டாகின்றது, அதற்குத்தக்க யுக்தி இருப்பதால்) என்று ப்ரும்ம சூத்திரம் 3 அத்தியாயம் 2 பாதம் 28வது சூத்திரத்திலும், सवा एष महानज आत्मा अन्नादो वसुदानः(அந்த பரமாத்மாவே நாலாபக்கத்திலிருந்தும் அன்னத்தைத்தருகிறார், அவரே தனத்தையுந் தருகிறார்) என்று பிருஹதாரண்ணியத்திலும் लभते च ततः कामान्मयैव विहितान् हितान् என்று பகவத்கீதையிலுஞ் சொன்னபடி சர்வகர்மபலனைக் கொடுப்பவராயிருக்குந் தன்மையும் வாய்ந்தவர் என்றதால் கேவல அக்கி தேவதையினிடம் ஒருபொழுதும் பொருந்தாத பரமேசுவர அசாதாரண மகிமா விசேஷமானது உபதேசிக்கப்பட்டது.

ஏழாவது ருக்கு

गोभिर्जुष्टमयुजो निषिक्तं तवेन्द्र विष्णोरनुसंचरेम ।
नाकस्य पृष्ठमभिसंवसानो वैष्णवीं लोक इह मादयन्ताम् ॥

| | |
|---|---|
| इन्द्र | ஓபரமேசுவர |
| अयुजः | துக்கசம் பந்த மற்றவராயும் |
| विष्णोः | சர்வவியாபகராயுமிருக்கிற |
| तव | உம்மை |
| गोभिः | பசுக்களால் |
| जुष्टम् | சேவிக்கப்பட்டதாயும் |

| | |
|---|---|
| निषिक्तम् | (அமுதப் பெருக்கால்) நனைக்கப் பட்டதாயுமுள்ள |
| (माहाभाग्यमुद्दिश्य) | (அழியாப் பெருஞ்செல்வத்தைக் குறித்து) |
| अनु | ஆசார்யோப தேசத்திற்கிணங்க |
| संचरेम | சேவிக்கின்றோம். |
| नाकस्य | பரம பதத்தினுடைய |
| पृष्ठमभि | நாலா பக்கங்களிலும் |
| संवसानः | வசிக்கின்ற வர்களான (தேவர்கள்) |
| इह | இந்த |
| लोके | பூலோகத்தில் |
| वैष्णवीम् | சர்வ வியாபகரான தங்களது தேவியாரையுபாசிக்கின்ற என்னை |
| मादयन्ताम् | சந்தோஷப் படுத்தட்டும் |

अङ्गान्यन्या देवताः (மற்ற தேவர்கள் இவரது அங்கங்கள்) என்றபடி தங்களது அங்கபூதர்களும், தங்களது ஆக்ஞையை எதிர் பார்த்து பரமபதமான ஸ்ரீ கைலாயத்தில் தங்களது அருகிலேயே வசிப்பவர்களுமான குபேரன் முதலிய தேவர்கள் துக்க சம்பந்த மற்றவரும், சர்வாந்தர்யாமியுமான தங்களை உபாசிக்கும் எனக்கு பணம் பசுமுதலியன நிறைந்த சௌபாக்கியத்தைத் தந்தும், அமுதானுபவத்தைப் போல அதை அநுபவிக்குங் காலத்து அதிக சந்தோஷத்தையுந் தரும்படி அவர்களுக்கு ஆக்ஞை செய்து அத்

தேவர்கள் வாயிலாகவும் நேறிலும் தாங்கள் அடி யேனை கார்த்தருளவேண்டு மென்று இதனால் பிரார்த் திக்கப் பட்டது.

कात्यायनाय विद्महे कन्यकुमारि धीमहि।
तन्नो (1) दुर्गिः प्रचोदयात्।

| | |
|---|---|
| कन्यकुमारि | காத்தியாயனருக்குப் புத்திரியாகப்பி றந்தவுடன், கன்னிகையாயும், கொ ஞ்சம்வயது சென்றபிறகுக் கல்யா ணமாவதற்கு முன் குமாரியாயும் இருந்த ஓ துர்க்காதேவியே! |
| विद्महे | வேதம், சாஸ்திரம், குருபதேசம் இவைகளால் எல்லாத்தேவர்களுக் கும் மேலானவராகவும், பக்தி ஒன் றினால் மட்டும் சுலபையாகவும் (உ ம்மைத்) தெரிந்து கொள்கிறோம் |
| (विदित्वाच) | (அவ்விதந் தெரிந்து கொண்டு) |
| कात्यायनाय | காத்யாயனர் என்ற உனது பிதாவுக்கு |
| (भुक्तिमुक्तिप्रदात्रीम्) | (இம்மையில் சகலபோகங்களையும், ம றுமையில் மோக்ஷத்தையும் கொடு த்தருளிய உன்னை) |
| धीमहि | (இடைவிடாமல்)தியானஞ்செய்கிறோம் |
| तत् | அவ்விதம் தியானஞ் செய்வதற்காக |
| नः | எங்களை |

(1) दुर्गी என்று சிலர் படிக்கிறார்கள்.

दुर्गिः     துர்க்காதேவியானவள்

प्रचोदयात्     தூண்டவேண்டும்

தா-ம். ஓதுர்க்காதேவியே! தங்களது சுவரூப சுவபாவாதிகளைத்தெரிந்து கொள்வதும், அதற்கிணங்க எவ்விதவிக்கினமுமின்றித்யானஞ் செய்வதும் தங்களது அனுக்கிரஹமன்றி ஏற்படாதாகையால் தாங்களே தயவுசெய்து என்னைத் தங்கள்பக்தனுகச்செய்து இம்மையிலும் மறுமையிலும் க்ஷேமத்தைக்கொடுக்க வேண்டுமென்று இதனுல் பிரார்த்திக்கப்பட்டது.

ஸ்ரீ துர்க்கா ஸூக்தம்

முற்றிற்று



# கநகதாரா ஸ்தோத்திரம்

## முகவுரை.

ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசாரிய ஸ்வாமிகளவர்கள் பிரும்மசாரியா யிருந்துவரும் பொழுது துவாதசீதிதி யன்று ஒரு ஏழைப் பிராம்மணன் கிருஹத்திற்கு பிக்ஷவாங்குவதற்காகச் சென்றனர். அங்குசென்று சம்பிரதாயப்படி "பவதிபிக்ஷாந்தேஹி" என்று சொன்னார். இதைக் கேட்டு அந்த வீட்டுக்குச் சொந்தக்காரியும் மகாபதிவிரதையுமான ஒரு ஸ்திரீயானவள் வெளியே வந்து பிரும்மதேஜஸ்ஸினால் ஜ்வலித்துக் கொண்டிருக்குந் நமது ஆசாரியாளைபார்த்து, தனக்கு பிக்ஷ போடுவதற்குக் கூட சக்தியில்லாமையை நினைத்து மிகவும் வருந்தி, தெய்வ சங்கற்பத்தால் தற்சமயம் கையிற் கிடைத்த ஒரு நெல்லிக்கனியை ஆசாரியாரின் பிக்ஷா பாத்திரத்தில் போட்டாள். இதைக் கவனித்த ஆசாரியாள் உடனே கருணையையடைந்து எவ்விதத்திலாவது இந்த உத்தமியின் தாரித்திரியத்தை விலக்கவேண்டுமென்று திருடமாய்ச் சங்கற்பித்துக் கொண்டு ஸ்ரீதேவியை ஸ்துதி செய்தார். அந்த சமயத்தில் நமது ஆசாரியாளின் முகாரவிந்தத்தி னின்றும் வெளிவந்த ச்லோகங்களுக்கே கனகதாராஸ்தோத்திர மென்று பெயர். இந்த 15 ச்லோகங்களைப் படித்தவுடன் ஸ்ரீ தேவி

நேரில் பிரசன்னை யாகிவந்து என்னவேண்டு மென்று கேட்டாள். நீ என் விஷயத்தில பிரசன்னையா யிருப்பது நிச்சயமானால் எனக்கு இன்றை தினம் பிக்ஷா தானஞ்செய்த இந்த உத்தமியின் தாரித்திரியம் விலகுமாறு அருள்புரிய வேண்டுமென்று ஆசாரியாள் பிரார்த்தித்தவுடன், நெல்லிக்கனி பிரமாணமுள்ள தங்கக் கட்டியை ஒரு முகூர்த்தகாலம அவ்வுத்தமியின் கிருஹத்தில் வர்ஷிக்கும்படிச் செய்தாள் என்று சங்கர திக்விஜயம் என்றலைகளில் கூறப்பட் டிருக்கிறது.

இம் மஹாமஹிமை வாய்ந்த கநகதாராஸ்தோத்திரத்தையும ஸ்ரீ ஸூக்தத்துடன் பாராயணஞ் செய்து வந்தால் மிகுந்த லாபத்தைப் பெறலாமென்று கருதி இந்த ஸ்தோத்திரத்திற்குப் பதஉரைகருத்துரைகளை எளிய தமிழ்நடையில எழுதி வெளியிட் டிருக்கிறோம. ஆகவே இதன்மூல மனைவரும சகல க்ஷேமஙகளையு மடைந்து நமது சிரமம் பயன்படுமாறு முனவருவார்களௌன்று எதிர் பார்க்கிறோம.

இப்படிக்கு.

பெரம்பூர் பிரும்மஸ்ரீ கணேச சாஸ்திரிகள்

மீமாமஸா சிரோமணி

நியாய வியாகரணபாரங்கதர்

———

श्रीः

परमहंसपरिव्राजकाचार्यवर्यजगद्गुरुश्रीमदादि

शंकराचार्यैर्विरचितः

## कनकधारास्तवः

प्रारभ्यते.

अङ्गं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृङ्गाङ्गनेव मुकुलाभरणं तमालम् ।
अङ्गीकृताखिलविभूतिरपाङ्गलीला
माङ्गल्यदास्तु मम मङ्गलदेवतायाः ॥ (1)

मुकुलाभरणम् மொட்டுகளை அலங்காரமாயுடைய
तमालम् தமாலம் என்று பெயர்கொண்ட மரத்தை
भृङ्गाङ्गनेव பெண் வண்டு போல
पुलकभूषणम् ரோமாஞ்சத்தை அலங்காரமாயுடைய
हरेः நினைத்தமாத்திரத்தால் சகலபாபங்களையு மபஹரித்துக் கொள்ளுகிற ஸ்ரீமந் நாராயணனுடைய
अङ्गम् தோள், மார்பு, கை, முதலிய அங்கங்களை
आश्रयन्ती அடைகிறதாயும்

| | |
|---|---|
| अङ्गीकृता-खिलविभूतिः | அங்கீகாரஞ் செய்யப்பட்ட சகலவித மான ஐச்வர்யஙகளை யுடையதாயு மிருக்கிற |
| मङ्गलदेवतायाः | கல்யாணம், மஙகளம், க்ஷேமம், என்று சொலலக்கூடியதறகு அபிமானி தேவதையான(யஜமானியான) ஸ்ரீலக்ஷ்மீ தேவியினுடைய |
| अपाङ्गलीला | கடைக்கண்ணின் லீலையானது (பார்வையானது) |
| मम | எனக்கு |
| माङ्गल्यदा | மங்களத்தைக் கொடுப்பதாக |
| अस्तु | இருக்கட்டும |

தா-ம். ஓ ஸ்ரீதேவியே! தாங்கள் ஸ்ரீமஙநாராயணனுடைய அங்க சௌநதர்யத்தைப் பார்த்து சந்தோஷிப்பதற்காக, வெட்கத்தால கடைக்கண்ணால் பார்க்கிறீர்கள். கருவண்டுபோல கருததாயும், குளுமை பொருந்தியதாயுமிருக்கிற தங்களது கடாக்ஷம் கீருண்டமேகம்போல கருத்த பகவானுடைய திருமேனியிற்பட்டதும் அவரது சரீர மெல்லாம் ரோமாஞ்சமடைந்து முன்னிலும் அதிகசோபை வாய்ந்ததாயாகிறது அதில் மருபடியும் தங்கள்கடாக்ஷஞ் சஞ்சரிக்கிறது. இவ்விதம் ஒவ்வொரு அங்கத்திலும் சஞ்சரிக்குந் தங்கள் கடாக்ஷமானது மொட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட கருமைநிறமுள்ள தமாலம்என்ற மரத்தில் ஆங்காங்குபரந்து சென்றுக்கொண்டிருக்கும் பெண்வட்டுக்குச் சமானமா யிருக்கின்றது. அஃதுடன்

ன்னை உபாஸிப்பவர்களுக்கு சகலவிதமான சம்பத்தையும் கொடுப்பதில் திருடமான சங்கற்ப முள்ளாயுமிருக்கிறது. அந்த தங்களது கடைக்கண்பார்வயானது எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.

मुग्धा मुहुर्विदधती वदने मुरारेः
प्रेमत्रपाप्रणिहितानि गतागतानि ।
माला दृशोर्मधुकरीव महोत्पले या
सा मे श्रियं दिशतु सागरसंभवायाः ॥ (2)

मुग्धा — அழகுவாய்ந்ததாயும்
मुरारेः — நாராயணனுடைய
वदने — முகத்தில்
प्रेमत्रपाप्रणिहितानि — ஸ்நேஹம், லஜ்ஜை இவைகளால் உண்டான
गतागतानि — போக்குவரத்துகளை
महोत्पले — நீலோத்பலபுஷ்பத்தில்
मधुकरीव — பெண்வண்டுபோல
विदधती — செய்கிறதாயுமிருக்கிற
सागरसंभवायाः — க்ஷீர சமுத்திரத்தினின்று ஆவிர்ப்பவித்த ஸ்ரீதேவியினுடைய
या — எந்த
दृशोः — கண்களுடைய
माला — வரிசையுண்டோ
सा — அந்த வரிசையானது
मे — எனக்கு

श्रियम् சம்பத்தை
दिशतु கொடுக்கட்டும்.

தா-ம். ஓ ஸ்ரீதேவியே! மலர்ந்த நீலோத்பல புஷ்பம்போலுள்ள பகவானுடைய முகமண்டலத்தின் அழகைப்பார்தது சந்தோஷிப்பதற்காக தங்களால் அனுப்பப்பட்ட கடாக்ஷமானது மத்தியில் பகவானின் கடாக்ஷத்தைச சநதித்து வெட்கத்துடன் திரும்பிவிடுகிறது. கொஞ்சகாலங் கழித்து மருபடியும் பகவங் முகத்தில் சஞ்சரிக்கின்றது. பகவத் கடாக்ஷத்தை மருபடியுஞ் சந்தித்து வெட்கத்தால் திரும்பி விடுகிறது. இவ்விதம, மலர்ந்த நீலோத்பல புஷ்பத்தில் பெண்வண்டுபோல் பகவங்முகமண்டலததில் சஞ்சரிக்குங் தங்களுடைய கடாக்ஷ பரமபரையானது எனக்குச் சம்பத்தைக் கொடுக்கவேண்டும என்று இதனுல் பிரார்த்திக்கப்பட்டது.

विश्वामरेन्द्रपदविभ्रमदानदक्ष-
मानन्दहेतुरधिकं मुरविद्विषोऽपि ।
ईषन्निषीदतु मयि क्षणमीक्षणार्द्ध-
मिन्दीवरोदरसहोदरमिन्दिरायाः ॥ (3)

विश्वामरेन्द्र- சகலமான தேவ சிரேஷ்டர்களுடைய
पदविभ्रमदा- ஸ்தானததின் போகத்தைக் கொடு
नदक्षम् ப்பதில் திறமை வாய்ந்ததாயும்
मुरविद्विषोऽपि (அவாப்தசமஸ்தகாமனை) ஸ்ரீநாரா யணனுக்கும்

| | |
|---|---|
| अधिकम् | மிகவும் |
| आनन्दहेतुः | சந்தோஷத்திற்குக் காரணமாயும் |
| इन्दीवरोदरस-होदरम् | நீலோத்பலபுஷ்பத்தின் மத்யபாகத்திற்குச் சமானமாகவுமிருக்கிற |
| इन्दिरायाः | லக்ஷ்மீதேவியினுடைய |
| ईक्षणार्द्धम् | கடாக்ஷத்தின் பாதியானது |
| मयि | என்னிடம் |
| क्षणम् | க்ஷணகாலம் |
| ईषत् | கொஞ்சம் |
| निषीदतु | உட்காரட்டும் |

தா-ம். ஓ ஸ்ரீதேவியே! எந்த தங்களது கடா
க்ஷமானது இந்திரன், வருணன், குபேரன், பிரும்மா,
முதலிய தேவசிரேஷ்டர்களின் ஸ்தானங்களை விளை
யாட்டாகவே கொடுப்பதற்கு சக்திவாய்ந்ததோ, அ
வாப்த சமஸ்தகாமனுன ஸ்ரீ நாராயணனுக்கு மதிக
மாய் ஆனந்தத்தைப் பெருக்கக்கூடியதோ அந்த
நீலோத்பலபுஷ்பத்தின் மத்யபாகம்போல் கருத்த
தான கடாக்ஷத்தின் ஏகதேசமானது கொஞ்சகாலம்
அடியேன்மேல் விழட்டும் என்று இதனுல் பிரார்த்
திக்கப்பட்டது.

आमीलिताक्षमधिगम्य मुदामुकुन्द-
मानन्दकन्दमनिमेषमनङ्गतन्त्रम् ।
आकेकरस्थितकनीनिकपक्ष्म नेत्रं
भूत्यै भवेन्मम भुजङ्गशयाङ्गनायाः॥ (4)

मुदा — சந்தோஷத்தால் (சுகவிசேஷத்தினால்)

आमीलिताक्षम् — கொஞ்சம் மூடப்பட்ட கண்களையுடைய

मुकुन्दम् — ஸ்ரீ நாராயணனை

अधिगम्य — அடைந்து

(वर्तमानम्) — (இருக்கிறதாயும்)

आनन्दकन्दम् — சந்தோஷத்தின் முளையாயும்

अनिमेषम् — இமைக்கொட்டுதலில்லாததாயும்

अनङ्गतन्त्रम् — மன்மதனைப் பிரதானமாயுடைய தாயும்

(1)आकेकरस्थित-कनीनिकपक्ष्म — கொஞ்சந்திரந்த கடைக்கண்ணில் இருக்கிற கரிவிழி, இமைமயிர் இவைகளை யுடையதாயும் இருக்கிற

भुजङ्गशयाङ्गनायाः — ஆதிசேஷன்மேல் சயனித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீநாராயணனின் பத்தியான ஸ்ரீ லக்ஷ்மீதேவியினுடைய

नेत्रम् — கண்ணானது

मम — எனக்கு

भूत्यै — சம்பத்தின்பொருட்டு

भवेत् — இருக்கட்டும்

தா-ம். ஓ லக்ஷ்மீதேவியே! ஸ்ரீ நாராயணன், மன்மதனை விருத்திசெய்கிறதாயும், சுகவிசேஷத்தைப்

---

(1) दृष्टिराकेकरा किञ्चित्स्फुटापाङ्गे प्रसारिता ।
मीलितार्धा परालोके ताराव्यावर्तनोद्भवा ॥ என்று
आकेकरदृष्टिक्கு லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது.

பெருக்குகிறதாயு மிருக்கிற தங்களது கடாக்ஷாமிரு தத்தில் முழுகி ஆதிசேஷ தல்பத்திற் படுத்து நிரதிசயமான சுகத்தை அனுபவிக்குங்கால் அவரது இரண்டுகண்களும் தானாகவே மூடிக்கொண்டு விடுகின்றன. அப்பொழுது எந்த தங்களது கடாக்ஷமானது எவ்வித தடையுமில்லாமல் இமைக்கொட்டுதலைக் கூட விலக்கி பகவானுடைய ஒவ்வொரு அவயவங்களிலும் யதேச்சமாய் சஞ்சரிக்கின்றதோ, அந்த கடாக்ஷமானது எனக்குச் சம்பத்தைக் கொடுக்கவேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப் பட்டது

बाह्वन्तरे मधुजितः श्रितकौस्तुभे या
हारावलीव हरिनीलमयी विभाति ।
कामप्रदा भगवतोऽपि कटाक्षमाला
कल्याणमावहतु मे कमलालयायाः ॥ (5)

| | |
|---|---|
| श्रितकौस्तुभे | கௌஸ்துபம் என்ற சிறந்தரத்தினத்துடன் கூடின |
| मधुजितः | ஸ்ரீ நாராயணனுடைய |
| बाहूवन्तरे | மார்பில் |
| या | எந்த கடாக்ஷமாலையானது |
| हरिनीलमयी | இந்திர நீலரத்தினமயமான |
| हारावलीव | மாலைகளின் வரிசைபோல |
| विभाति | விளங்குகின்றதோ |
| भगवतोऽपि | சமக்கிரமான ஐச்வர்யம், வீர்யம், யசஸ், முதலிய ஆறுகுணங்களுடன் கூடின ஸ்ரீநாராயணனுக்கும் |

कामप्रदा — காமனைக்கொடுகிறதாயும (அபீஷ்டங்களைக் கொடுக்கிறதாயும) இருக்கிற

कमलालयाया: — லக்ஷ்மீதேவியினுடைய

(सा) — (அநத)

कटाक्षमाला — கடாக்ஷங்களுடைய வரிசையானது

मे — எனககு

कल्याणम् — கலயாணத்தை அலலதுசுவாணத்தை

आवहतु — கொடுககட்டும

தா - ம்.—ஓ லக்ஷ்மீதேவியே! தங்களுடைய இந்திர நீலமபோல்கருத்த கடாக்ஷங்களுடைய வரிசையானது கௌஸ்துபம என்ற ரததினததால அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ நாராயணனுடைய மாாபில விழுகிறது இவ்விதம் விழுநத கடாக்ஷங்களுடையவரிசையானது கௌஸ்துப ரத்தினததை நடு நாயக்சமாய் வைதது இந்திர நீலரத்தினத்தாற் கட்டப்பட்ட ஹாரங்கள்போல் விளஙகுகின்றது. அவாப்த சமஸ்நகாமனை பகவானுக்கும (1) காமனைக் கொடுக்கக்கூடிய

---

(1)காம எனற பதத்திற்கு அபீஷ்டம் என்றும, மன்மதன் என்றும இரண்டு விதமான பொருள் உணடு. இவ்விரண்டு அாததஙகளும இவவிடத்தில சிலேடையாய்கூறபபட்டிருகின்ற. ஸ்ரீ நாராயணனுக்கு ஏறபட்டவைபவஙகளெலலா வற்றிறகும் தஙகளது கடாக்ஷமே காரணமென்று ஒரு அாததம் தஙகளது கடாக்ஷபாதத்தால்பகவானுக்கும மன்மதபாதை உணடாகிறது என்று மற்றுமோா அர்த்தம்.

அந்த தங்களது கடாக்ஷமானது எனக்குக் கல்யாண த்தைக்கொடுக்கட்டும் என்று இதனைப்பிரார்த்திக்கப் பட்டது.

कालांबुदालिललितोरसि कैटभारे
धाराधरे स्फुरति यत्तटिदङ्गनेव ।
मातुस्समस्तजगतां महनीयमूर्ति
र्भद्राणि मे दिशतु भार्गवनन्दनायाः ॥ (6)

| | |
|---|---|
| भार्गवनन्दनायाः | ஸ்ரீதேவியினுடைய |
| यत् | எந்த ஸ்ரீமூர்த்தியானது |
| कैटभारेः | ஸ்ரீ நாராயணனுடைய |
| कालांबुदालि-ललितोरसि | கருத்த மேகங்களுடைய வரிசை போல் அழகான மார்பில் |
| धाराधरे | நீருண்ட மேகத்தில் |
| तटिदङ्गनेव | மின்னலாகிற ஸ்திரீபோல |
| स्फुरति | பிரகாசிக்கின்றதோ |
| समस्तजगताम् | எல்லாலோகங்களுக்கும் |
| मातुः | மாதாவான ஸ்ரீ தேவியினுடைய |
| सा | அந்த |
| महनीयमूर्तिः | அழகு பொருந்திய ஸ்ரீமூர்த்தியானது |
| मे | எனக்கு |
| भद्राणि | க்ஷேமங்களை |
| दिशतु | கொடுக்கட்டும் |

தா-ம். ஓ லக்ஷ்மீ தேவியே! கருத்தமேகம் போல் அழகுவாய்ந்த ஸ்ரீ நாராயணனுடைய திரு

மார்பில் எந்த தங்களது திருமேனி யானது நீருண்ட மேகத்தில் மின்னற்கொடிபோல் பிரகாசிக்கின்றதோ அந்த ஸ்ரீ மூர்த்தியானது எனக்கு க்ஷேமங்களைக்கொடுக்கவேண்டும் தாங்கள் ஜகந்மாதாவா யிருப்பதால் எங்களது பிரார்த்தனையை அசட்டை செய்வது நியாயமலல. பாலாகளான நாங்கள மாதாவான தங்களைத்தவிற வேறு யாரிடம அபீஷ்டங்களை யாசித்துப் பெற்றுக் கொள்வது. ஆதலாற்றுங்கள் தாமதமன்றி அருள் புரியவேண்டுமென்று இதனுல் பிரார்த்திககப பட்டது

प्राप्तं पदं प्रथमतः खलु यत्प्रभावा-
न्माङ्गल्यभाजि मधुमाथिनि मन्मथेन ।
मय्यापतेत्तदिह मन्थरमीक्षणार्द्धं-
मन्दालसं च मकरालयकन्यकायाः ॥ (7)

यत्प्रभावात् எநத கடாக்ஷத்தின் மஹிமையால்
माङ्गल्यभाजि கல்யாணத்தை யடைந்தவராயாகிய
मधुमाथिनि மதுவைக் கொன்ற பகவானிடம்
यत्प्रभावात्खलु எந்த கடாக்ஷபலத்தாலேயே
मन्मथेन மன்மதனுல்
पदम् இடமானது
प्रथमतः முதலில்
प्राप्तम् அடையபபட்டதோ
मन्थरम् மெதுவாய்ச் சஞ்சரிக்கிறதாயும்

| | |
|---|---|
| मन्दालसंच | வேறு விஷயத்தை யடைவதற்கு விருப்ப மில்லாததாயும், வெட்கத்தால் ஆபீஷ்ட வஸ்து விஷிடமிருந்துத் திரும்புகிறதாயு மிருக்கிற |
| तत् | அந்த |
| मकरालयकन्याकायाः | சமுத்திரராஜ குமாரியான ஸ்ரீதேவியினுடைய |
| ईक्षणार्धम् | நேத்திரத்தின் பாதியானது (கடாக்ஷமானது) |
| इह | இந்த |
| मयि | என்னிடம் |
| आपतेत् | கொஞ்சம் விழவேண்டும் |

தாசும். ஓ ஸ்ரீதேவியே! (1) மதுவைக் கொன்றவராயிருப்பதால் பயமடைந்த மன்மதன் எந்த தங்களது கடாக்ஷத்தால் ஸ்ரீ நாராயணனேயும் ஜயித்தானே, मङ्गलानां चमङ्गलम् (மங்களமான வஸ்துக்களுக்கும் மங்களத்தைக் கொடுப்பவர்) என்றபடி

---

(1) மது என்றபதத்திற்கு வசந்த ருது என்றும், மதுஎன்று பெயர் கொண்ட அசுரன் என்றும் அர்த்தம். மது என்ற அசுரனை பகவான் கொன்றவரா யிருந்தபோதிலும் சிலேடையால் வசந்தனையும் சம்ஹரித்தவர் என்ற அர்த்தத்தையும் எடுத்துக் கொண்டு, அதனுல் தனது சுஹிருத்தான வசந்தனை பகவான் கொன்றிருப்பதால் அவனது சுஹிருத்தான நம்மையும் கொன்றுவிடுவார் என்று மன்மதன் பயந்து வெகுகாலம் வரையிலும் நாராயண னிருக்குமிடம் செல்லாமலிருந்தான் லக்ஷ்மீகடாக்ஷ பலத்தால் பகவானே ஜயித்தான் என்ற கருதைக் கொள்ள வேண்டும்.

பரமமங்களமா யிருக்குந்தன்மை யானது ஸ்ரீநாராய ணனுக்கு எந்த தங்களது கடாக்ஷ விசேஷத்தால் ஏற்பட்டதோ, அந்த தங்களுடைய கடாக்ஷமானது என்னிடம் கொஞ்சம் விழவேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

दद्याद्दयानुपवनो द्रविणांबुधारा
मस्मिन्नकिञ्चनविहङ्गशिशौ विषण्णे ।
दुष्कर्मघर्ममपनीय चिराय दूरं
नारायणप्रणयिनीनयनांबुवाहः ॥ (8)

| | |
|---|---|
| दयानुपवनः | தயையாகிற அனுகூலமான காற்றை யுடையதாய் இருக்கிற |
| नारायणप्रण-यिनीनयनां-बुवाहः | நாராயணனின் பத்னியான லக்ஷ்மீ தேவியினுடைய கண்களாகிற நீருண்ட மேகமானது |
| विषण्णे | கஷ்டப்படுகின்ற |
| अस्मिन् | இந்த |
| अकिञ्चनवि-हङ्गशिशौ | ஏழையான சாதகக்குஞ்சினிடத்தில் |
| चिराय | வெகுகாலமாய்(இருந்து வருகின்ற) |
| दुष्कर्मघर्मम् | பாபங்களாகிற கோடையை |
| दूरम् | வெகுதூரத்தில் |
| अपनीय | விலக்கி |
| द्रविणांबुधाराम् | சம்பத்தாகிற மழையை |
| दद्यात् | கொடுக்கவேண்டும் |

தா-ம். ஓ ஸ்ரீதேவியே! அனுகூலமான காற்றி னால் தூண்டப்பட்ட நீருண்டமேகம் அதிகமாய் மழை யைப்பொழிந்து தாகத்தைப்பொருத்துக்கொள்ள சக் தியற்ற சாதக சிசுவிர்க்கு நீண்ட கோடைகாலத்தால் ஏற்பட்ட தாகத்தைத்தீர்த்து எவ்விதஞ் சுகத்தைக் கொ டுக்குமோ அவ்விதந் தங்களுடைய கடாக்ஷமானது ஏழையான என் விஷயத்தில் தயையால் ஏவப்பட்ட தாய்க்கொண்டு அதிகமான சம்பத்தை வர்ஷித்து வெகுகாலமாய் அனுபவிக்கப்பட்டு வருந் தாரித்திரிய கஷ்டத்தை விலக்கிச் சுகத்தைக் கொடுக்க வேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப் பட்டது.

इष्टाविशिष्टमतयोऽपि यया दयार्द्र
दृष्ट्या त्रिविष्टपपदं सुलभं लभन्ते ।
दृष्टिः प्रहृष्टकमलोदरदीप्तिरिष्टां
पुष्टिं कृषीष्ट मम पुष्करविष्टरायाः ॥ (9)

इष्टाविशिष्टमतयोऽपि — பூஜை செய்வதின் முறையை நன்றாய றியாத புத்தியை யுடையவர்களும்

यया — எந்த

दयार्द्रदृष्ट्या — தயாரசத்தால் நனைந்த கடாக்ஷத்தால்

त्रिविष्टपपदम् — சுவர்க்கத்தை (பரமபதத்தை)

सुलभम् — சிரமமன்றியே

लभन्ते — அடைகிறார்களோ

प्रहृष्टकमलोद- नன்றாய் மலர்ந்த தாமரைப்புஷ்பத்தி
रदीप्तिः ஞுடைய மத்தியின் சோபையை
யுடைய

सा அந்த
पुष्करविष्टरायाः தாமரைப் புஷ்பத்தை ஆசனமாயுடை
ய ஸ்ரீதேவியினுடைய

दृष्टिः கடாக்ஷமானது
पुष्टिम् புஷ்டியை
कृषीष्ट செய்யட்டும்

தா-ம. ஓ ஸ்ரீதேவியே! சாஸ்திரங்களிற் சொல்லிய முறைப்படி ஆராதனஞ் செய்யத் தெரிந்துகொள்ளாமல், அவரவர்களுக்குத் தோன்றியபடி பூஜை செய்வோருக்குஞ் தயாரசத்தால் நனைக்கப்பட்ட எந்த தங்களது கடாக்ஷமானது சுவர்க்காதி போகங்களைக் கொடுக்கின்றதோ அந்த மலர்ந்த தாமரைப் புஷ்பம் போல் அழகிய கடாக்ஷமானது தனம், தான்யம், சந்தானம் முதலியவைகளிற சமிருத்தியைக் செய்யட்டுமென்று இதனல் பிரார்த்திக்கப் பட்டது.

गीर्देवतेति गरुडध्वजसुन्दरीति
शाकंभरेति शशिशेखरवल्लभेति ।
सृष्टिस्थितिप्रलयकेलिषु संस्थिता या
तस्यै नमः त्रिभुवनैकगुरोस्तरुण्यै ॥ (10)

या எந்த பராசக்தியான லக்ஷ்மீதேவி
யானவள்

| | |
|---|---|
| सृष्टिस्थिति-प्रलयकेलिषु | படைப்பது, காப்பது, நாசஞ்செய்வது என்பதாகிற லீலையைச் செய்யுங் காலத்தில் |
| गीर्देवतेति | சரஸ்வதீ தேவி என்றும் |
| गरुडध्वजसुन्द-रीति | நாராயணனின் பார்யை என்றும் |
| शाकंभरेति | சாகம் பரை என்று பெயர் கொண்ட |
| शशिशेखरवल्ल-भेति | பரமேசுவரனின் பாரியை என்றும் |
| संस्थिता | இருக்கிறாளோ |
| तस्यै | அந்த |
| त्रिभुवनैकगुरोः | மூன்று லோகத்திற்கும் பிதாவான பகவானுடைய |
| तरुण्यै | யுவதியான(பத்நியான) ஸ்ரீதேவியாருக்கு |
| नमः | நமஸ்காரம் |

தா-ம். எந்த துரீயையான ஸ்ரீ தேவியானவள் உலகங்களைப் படைக்குஞ் சமயத்தில் சரஸ்வதீ என்ற பெயருடனும், பரிபாலிக்குஞ் சமயத்தில் லக்ஷ்மீ என்ற பெயருடனும், சம்ஹரிக்குங் காலத்தில் சாகம்பரை என்ற பெயருடனும் விளங்கி படைப்பது காப்பது நாசஞ் செய்வது என்ற லீலைகளைச் செய்துகொண்டிருக்கிறாளோ அந்த பரப்பிரும்மத்தின் மஹிஷியான (சக்தியான) ஸ்ரீ தேவியாருக்கு மூன்று கரணங்களாலும் நமஸ்காரஞ் செய்கிறேன் என்று இதனால் கூறப்பட்டது.

श्रुत्यै नमोऽस्तु शुभकर्मफलप्रसूत्यै
रत्यै नमोऽस्तु रमणीयगुणार्णवायै
शक्त्यै नमोऽस्तु शतपत्रनिकेतनायै
पुष्ट्यै नमोऽस्तु पुरुषोत्तमवल्लभायै ॥ (11)

| | |
|---|---|
| शुभकर्मफलप्रसूत्यै | சுபகர்மங்களை அனுஷ்டிக்கும்படி உபதேசித்து, அதன்மூலம் நல்லபலனை உண்டுபண்ணுகிற |
| श्रुत्यै | வேதமாதாவாய் இருக்கிற ஸ்ரீதேவியாருக்கு |
| नमः | நமஸ்காரம் |
| अस्तु | இருக்கட்டும் |
| रमणीयगुणार्णवायै | ரூபம், லாவண்யம், மாதுர்யம் முதலிய நல்ல குணங்களுக்கு சமுத்திரமாயிருப்பவளான |
| रत्यै | ரதிதேவியின் உருவமாயிருக்கிற ஸ்ரீ தேவியாருக்கு |
| नमः | நமஸ்காரம் |
| अस्तु | இருக்கட்டும் |
| शतपत्रनिकेतनायै | தாமரைப்புஷ்பத்தை வீடாக உடைய |
| शक्त्यै | சக்தியின் உருவமாயிருப்பவளான ஸ்ரீதேவியாருக்கு |
| नमः | நமஸ்காரம் |
| अस्तु | இருக்கட்டும் |

पुरूषोत्तमवल्ल- ஸ்ரீ நாராயணனின் பத்தினியான
भायै

पुष्ट्यै புஷ்டியின் ரூபமாயிருப்பவளான ஸ்ரீ தேவி யாருக்கு

नमः நமஸ்காரம்

अस्तु இருக்கட்டும்

குறிப்பு—ச்ருதி, என்றும், ரதி என்றும், சக்தி என்றும், புஷ்டி என்றும் மஹாலக்ஷ்மியின் அம்சம் வாய்ந்த ஆவரண சக்திகளும் அவர்களுடைய சுவ ரூப சுவபாவாதிகளும் அவரவர்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் விசேஷணங்களால் தெரிவிக்கப் படுகின்றன என்று அரியவேண்டும்.

नमोऽस्तु नालीकनिभाननायै
नमोऽस्तु दुग्धोदधिजन्मभूम्यै ।
नमोऽस्तु सोमामृतसोदरायै
नमोऽस्तु नारायणवल्लभायै ॥ (12)

नालीकनिभान- தாமரைப் புஷ்பத்திற்குச் சமான
नायै மான முகத்தை யுடைய ஸ்ரீ தேவி யாருக்கு

नमः நமஸ்காரம்

अस्तु இருக்கட்டும்

दुग्धोदधिजन्म- க்ஷீரசமுத்திரத்தைப் பிறப்பிடமாயு
भूम्यै டைய ஸ்ரீ தேவியாருக்கு

नमः நமஸ்காரம்

अस्तु — இருக்கட்டும்.
सोमामृतसोद्-रायै — சந்திரன, அமுதம் இவைகளைச் சகோதரர்களாக உடைய ஸ்ரீதேவி யாருக்கு
नमः — நமஸ்காரம்
अस्तु — இருக்கட்டும்
नारायणवल्ल-भायै — ஸ்ரீநாராயணனின் பத்னியான ஸ்ரீதேவியாருக்கு
नमः — நமஸ்காரம்
अस्तु — இருக்கட்டும்

குறிப்பு—नालीकनिभाननायै என்றதால் திருமேனியின் அழகும், दुग्धोदधिजन्मभूम्यै என்றதால் உத்தமகுலப் பிரசூதியும், सोमामृतसोदरायै என்றதால் சத்சகோதரர்களுடன் கூடி இருக்குகையும், அதன் மூலம் அவர்களுடைய திவ்யசுவபாவாதிகளுடன் கூடியிருக்குகையும், नारायणवल्लभायै எனறதால் பதியின் கௌரவமும் தெரிவிக்கப் பட்டதா யறியவேண்டும்.

संपत्कराणि सकलेन्द्रियनन्दनानि
साम्राज्यदानविभवानि सरोरुहाक्षि ।
त्वद्वंदनानि दुरिताहरणोद्यतानि
मामेव मातरनिशं कलयन्तु मान्ये ॥ (13)

मान्ये — அனைவராலும் பூஜிக்கத்தகுந்தவரும்
सरोरुहाक्षि — தாமரைப்புஷ்பம் போலுள்ள கண்களையுடையவரும்

| | |
|---|---|
| मातः | ஜகன்மாதாவுமான ஓ ஸ்ரீ தேவியாரே! |
| संपत्कराणि | சம்பத்தைக் கொடுக்கிறதுகளும் |
| सकलेन्द्रिय-नन्दनानि | எல்லா இந்திரியங்களையும் சந்தோஷப்படுத்தக் கூடியதும் |
| साम्राज्यदानविभवानि | சக்கிரவர்த்தியாயிருக்குந் தன்மையைக் கொடுப்பதில் சாமர்த்ய முள்ளதும் |
| दुरिताहरणोद्यतानि | பாபங்களை நாசஞ் செய்வதில தயாராக இருக்கின்றது மான |
| त्वद्वंदनानि | தங்களைவணங்குவதற் குரிய முயர்சிகள் |
| माम् | என்னை |
| अनिशमेव | எப்பொழுதுமே |
| कलयन्तु | அடையட்டும் |

தா-ம். ஓ ஸ்ரீ தேவியே! தஙகளை எவன் மூன்று கரணங்களாலும் நமஸ்கரிக் கின்றானோ அவனுக்கு அதிகமான சம்பத்து உண்டாகும். எந்த இந்திரியத்திற்குங் கெடுதல் ஏற்படாது. அந்தந்த இந்திரியங்கள் வாயிலாக அனுபவிக்கவேண்டிய சுகங்களை அனுபவிக்கலாம். பாபங்கள் விலகிவிடும். சக்கிரவர்த்தியாய்க்கூட ஆகிவிடலாம். தங்களை நமஸ்கரிப்பதால் இவ்வளவு உத்கிருஷ்ட பலன்கள் ஏற்படுவதா யிருந்த போதிலும் தங்களது தூண்டுத லில்லாவிடில் தங்களை நமஸ்கரிப்பதில் பிரவிருத்தி உண்டாகாது. ஆதலால் ஜகன்மாதாவா யிருப்பது பற்றி என்னிடம் கிருபை கூர்ந்து நமஸ்காரஞ் செய்வதில் பிரவிருத்தியை உண்டு

பண்ண வேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப் பட்டது.

सरसिजनिलये सरोजहस्ते
धवलतरांशुकगन्धमाल्यशोभे ।
भगवति हरिवल्लभे मनोज्ञे
त्रिभुवनभूतिकारि प्रसीदमह्यम् ॥ (14)

இந்த ச்லோகத்தின் அர்த்தத்தை 30வது பக்கத்திற் சொல்லியபடி தெரிந்துகொள்க.

दिग्घस्तिभिः कनककुंभमुखावसृष्ट-
स्वर्वाहिनीविमलचारुजलाप्लुताङ्गीम् ।
प्रातर्नमामि जगतां जननीमशेष-
लोकाधिनाथगृहिणीममृताब्धिपुत्रीम् ॥ (15)

दिग्घस्तिभिः திக்கஜங்களால

कनककुंभमुखावसृष्टस्वर्वाहिनीविमलचारुजलाप्लुताङ्गीम्

कनककुंभ தங்ககுடத்திலுடைய
मुख முகத்தினல்
अवसृष्ट கொட்டப்பட்டதும
स्वर्वाहिनी ஆகாச கங்கையினுடையதும்
विमल சுத்தமானதும்
चारु மனோஹரமானது மான
जल தீர்த்தத்தினல்
आप्लुत நனைக்கப்பட்ட

| | |
|---|---|
| अङ्गीम् | அங்கங்களையுடையவரும் |
| जगताम् | லோகங்களுக்கு |
| जननीम् | மாதாவாயிருப்பவரும் |
| अमृताब्धिपुत्रीम् | பாற்கடலின் பெண்ணாக அவதரித்தவரும் |
| अशेषलोकाधिनाथगृहिणीम् | எல்லா லோகங்களுக்கும் நாதனான ஸ்ரீ நாராயணனுடைய பத்தினியுமான ஸ்ரீதேவியாரை |
| प्रातः | காலையில் |
| नमामि | நமஸ்காரஞ்செய்கிறேன். |

தா-ம். காலையில் எழுந்தவுடன் ஸ்ரீதேவியை திக்கஜங்கள் தனது துதிக்கையில் தங்கமயமான குடத்தைத் தாங்கி ஆகாச கங்கையின் சுத்தமான தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்வதாகவும், சர்வ ஜகந்மாதாவாகவும், க்ஷீரசமுத்திரத்தின் பெண்ணாகவும், சர்வஜகத் பாலகனான ஸ்ரீநாராயணனுடைய பார்யையாகவும் தியானஞ்செய்து நமஸ்கரிக்கவேண்டுமென்று இதனால் உபதேசிக்கப்பட்டது.

कमले कमलाक्षवल्लभे त्वं
करुणापूरतरङ्गितैरपाङ्गैः ।
अवलोकय मामकिंचनानां
प्रथमं पात्रमकृत्रिमं दयायाः ॥ (16)

| | |
|---|---|
| कमलाक्षवल्लभे | செந்தாமரைக்கண்ணனை நாராயணனுடைய பாரியையான |

| | |
|---|---|
| कमले | ஓ ஸ்ரீதேவியே! |
| त्वम् | நீர் |
| करुणापूरतर-ङ्गितैः | தயாரசபிரவாஹத்தால் அலையுள்ள (நிறைந்த) |
| अपाङ्गैः | கடாக்ஷங்களால |
| अकिंचनानाम् | ஏழைகளுக்குள் |
| प्रथमम् | சிறந்தவனையும |
| दयायाः | தயைககு |
| अकृत्रिमम् | கபடமற்ற |
| पात्रम् | பாத்திரமாகவு மிருக்கிற |
| माम् | என்னை |
| अवलोकय | பார்ககவேண்டும். |

தா-ம். ஓ ஸ்ரீதேவியே! தயையுள்ளவர்களுக்குள் தங்களை முதலாவதாகவும் தீனர்களுக்குள் என்னை முதலாவதாகவும் கணிக்கவேண்டி யிருப்பதால் உண்மையில் மிகவும் ஏழையான என்னிடம் தயாரசம் நிறைந்த தங்களுடைய கடாக்ஷத்தைச் செலுத்தி அருள்புரியவேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

स्तुवन्ति ये स्तुतिभिरमीभिरन्वहं
त्रयीमयीं त्रिभुवनमातरं रमाम् ।
गुणाधिका गुरुतरभाग्यभाजिनो
भवन्ति ते भुवि बुधभाविताशयाः ॥ (17)

| | |
|---|---|
| ये | எவர்கள் |
| अमीभिः | இந்த |
| स्तुतिभिः | ஸ்தோத்திரங்களால் |

| | |
|---|---|
| त्रयीमयीम् | மூன்று வேதஸ்வரூபையாயும் |
| त्रिभुवनमातरम् | மூன்று லோகங்களுக்குந் தாயாயிருக்கிற |
| रमाम् | ஸ்ரீதேவியை |
| अन्वहम् | தினந்தோறும் |
| स्तुवन्ति | துதிக்கின்றனரோ |
| (ते) | (அவர்கள்) |
| भुवि | பூலோகத்தில் |
| गुणाधिकाः | நல்ல குணங்களால் அனைவர்க்கும் மேலானவர்களாகவும் |
| गुरुतरभाग्य-भाजिनः | அதிகமான பாக்கியத்தைப் பெற்றவர்களாகவும் |
| बुधभाविता-शयाः | வித்வான்களால் பூஜிக்கத் தகுந்த அபிப்பிராயமுள்ளவர்களாகவும் |
| भवन्ति | ஆகின்றனர். |

தா-ம். எவர்கள் இந்த சுலோகங்களால் ஸ்ரீதேவியைத் தினந்தோறும் துதிக்கின்றனரோ அவர்கள் நல்லொழுக்கத்தால் எல்லோருக்கும் மேலாக இருக்குந்தன்மையையும், தனம், தான்யம், சந்தானம் முதலிய பாக்யங்களையும், வித்வான்களாற் போற்றத் தக்க புத்திவலிமையும் ஸ்ரீதேவியின் பிரசாதத்தால் பெற்று இம்மையில் சுகமாய் வாழ்ந்து மறுமையிலும் ஸ்வர்க்காதி போகங்களை யனுபவிப்பார்கள் என்று இதனால் உபதேசிக்கப் பட்டது.

கனக தாராஸ்தவம் முற்றிற்று



# விளம்பரம்.



## வைதிகமந்திர ரத்நாவளி

வைதிக மந்திர ரத்னாவளி என்னும் முறையில் உபநயனம் கல்யாணம் முதலிய சம்ஸ்காரங்களில் உபயோகிக்கப்படும் மந்திரங்கள் பல புத்தகங்களாகக் கிரமமாய் தமிழுரையுடன் அச்சிட்டுவெளியிடப்படும்.



### தற்சமயம் விற்பனைக்குத் தயாராக இருக்கும் புஸ்தகங்களாவன.

### ஸ்ரீ ருத்திரம்.

நியாய வியாகரண பாரங்கதரும், மீமாம்ஸா சிரோமணியுமான பெரம்பூர் பிரும்ம ஸ்ரீ கணேச சாஸ்திரிகள் அவர்களால் எளிய தமிழ்நடையில் எழுதப்பட்ட பதவுரை, கருத்துரை, விசேஷ வுரையுடன் கூடினது. கிளேஸ்காபி 1-8-0 ரப்காபி 1-0-0.



## அச்சிலிருக்கும் புஸ்தகங்கள்.

### ஸ்ரீ கோபிகா கீதம்.

வியாகரண வேதாந்த பாரங்கதரும், சோதிட சாஸ்திரவித்துவானும், பாகவத பகவத்கீதோ பன்னியாசகருமான கடலங்குடி பிரும்மஸ்ரீ நடேசசாஸ்திரிகள் அவர்களால் இனியதமிழ் நடையில் இயற்றப்பட்ட பதவுரை, கருத்துரை, விசேஷவுரை இவைகளுடன் கூடினது.

## கதாசரித்சாகரம்.



வெகுகாலத்திற்கு முன் வடமொழியில் ஸோமே சுவரன் என்ற கவியாலியற்றப்பட்டதும, படிக்கப் படிக்க மேன்மேலும் ஆவலைக் கொடுக்கக் கூடியதும், நீதிகளையும் தர்மங்களையும போதிக்கின்றதும, கஷ்ட காலங்களில் நேரும்மனத்தளர்ச்சியை பல திருஷ்டாந்த வாயிலாகவிலக்கி மறுபடியும் பிரவிருத்தியில் உத்சாகத்தைப்புகட்டக் கூடியதுமான புராதன கிரந்தத்தின் நேரான மொழி பெயர்ப்பு. ஒரேகதை அடிமுதல் முடிவுவரை செல்லுகின்றது. அதன் மத்தியில் சிறியதும், பெறியதுமான பலகதைகள் அடங்கி இருக்கின்றன. அவைகள் பெரும்பாலும் புராணக் கதைகளல்ல. எவ்விஷயத்திற்கும் திருஷ்டாந்தமான கதைகள் இருக்கின்றன.

## ஆரியமதசம்வர்த்தனி.



ஒருமாதாந்த தமிழ்பத்திரிகை.

இதில நான்கு வேதங்களின் மொழிபெயர்ப்பும் சாங்கியம், யோகம், முதலிய 6- தர்சனங்கள், 18- ஸ்மிருதிகள், இவைகளின் மொழிபெயர்ப்பும் சோதிடம் மந்திரம் இவைகளின் ரகசியங்களும், மற்றும் வைதிகமான பல உபன்யாசஙகளும டிம்மி 8-பக்க அளவில் நல்ல பேபரில் 40 பக்கமுள்ளதாய் வெளிவரும். வருஷசந்தா 6 0 0.

விலாசம்.—

கடலங்குடி பண்டித நடேசசாஸ்திரிகள்
495, தங்கசாலை தெரு. P.T. சென்னை.